உ

கணபதிதுணை.

இரகுநாதசேதுபதி

# ஒருதுறைக்கோவை.

பொன்னுங்கால்

## அமிர்தகவிராயர்

செய்தது.

---

இஃது.

எட்டுப்பிரதிகளிற்பாடந்தோறுமெழுத்தசை சீர்தளையடி
தொடை முதலிய சிதைந்தும்பிறழ்ந்தும் வேறுபட்டிருத்
தலைநோக்கிச் சுத்தபாடமாக வழங்குவிக்கும்
பொருட்டு.

மேற்படி. சமஸ்தானத்துக்கு - இஷ்டராகிய.

ஸ்ரீ. பூம்பாவை.

**அண்ணுசாமிமுதலியாரவர்கள்**

குமாரர்களாகிய

**சிங்காரவேலுமுதலியார்**

**சுந்தரவிநாயகமுதலியார்**

இவர்கள்

அச்சிற்பதிப்பித்துத்தருகவெனக் கேட்டுக்கொண்டபடி
யாற்சென்னைக்கல்விச்சங்கத்துத் தமிழ்ப்புலவராகிய

புதுவை.

**நயநப்பமுதலியாரவர்களாற்**

பலபிரதிகளைக்கொண்டு
பரிசோதிக்கப்பட்டுப்

பிலவஹு-மார்கழிமீ-அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

இதன்விலை - ரூ - க.

1841

உ

கணபதிதுணை.

இரகுநாதசேதுபதி

# ஒருதுறைக்கோவை.



## நாணிக்கண்புதைத்தல்.



பூமேவுதெய்வத் தளிர்முகைபூத்த பொற்கோலவல்லி
நாமேவுகல்விப் புயறளவாய்ரகு நாதனிசைப்
பாமேவுகந்த கிரிமணிச்சாரற் பளிக்கறைசூழ்
காமேவுமற்புத நம்பாலகத்துக் களிதருமே. (௧)

சூலங்கைக்கொண்ட விராமேசர்தாண்முடி சூடியெழு
ஞாலங்கைக்கொண்ட ரகுநாயகன்செம்பி நாடனையீர்
சேலங்கைக்கொண்டுயர் வல்லமென்பாலருள் செய்தனல்ல
காலங்கைக்கொண்டர சாள்வதுபார்த்திருங் கண்களித்தே (௨)

ஆயுந்தமிழினும் போரினும்பாரி லகத்தியனுஞ்
சேயும்புகழ்தள வாய்ரகுநாதன் சிலம்பில்வளனை
பாயுங்கயலிந்த நேமிகண்டாலெனப் பார்த்திடினுன்
றேயுந்தடமென வேயணங்கேயுனைச் சொல்லுவனே. (௩)

தேனார்மணமுல்லை வெண்டாரும்பைந்தமிழ்ச் செந்தொடையும்
தானார்தடம்புயத் தான்ரகுநாதன் றமிழ்ச்சிலம்பில்
வானாரிளம்பிறை வாணுதலீர் தும்பி வாழுமுங்கள்
கானார்குறிஞ்சியிற் செல்கின்றதாரையைக் காட்டிடுமே, (௪)

பண்டேந்தியசங்கி னம்போலமல்லிகைப் பாரமுகைச்
செண்டேந்தியகரத் தான்ரகுநாயகன் றேவைவெற்பில்
வண்டேந்தியசெங்கை வாழ்வேயென்னெஞ்ச மறுகுமதங்
கொண்டேந்தியவெங் கரிக்கோடுதோயுங் குருதிகண்டே. (௫)

வானைச்சுரபியைச் சிந்தாமணியைமந் தாரமென்னுங்
கானைப்பொருகொடை யான்ரகுநாயகன் கந்தகிரிச்
சோனைப்புதுமதா வார்குழலீரித் துதிக்கைவெம்போ
ரானைக்கிசையி லலங்காரமானுக் கழகல்லவே. (௬)

போரேறுவெங்க ணரக்கன்முன்மாதலி பூட்டியபொற்
றேரேறுசிங்கம் ரகுநாதன்றேவைச் சிலம்பில்வெய்ய
காரேறவன்கண்மை சேர்கையுற்றுயொரு காளைபின்சேர்
வாரேறுகொங்கையை நீதடுத்தாயிலை வன்புறவே. (௭)

மைம்மானிகர்த்த மலைவளர்காதலி மாதுவளர்
பெம்மானருட்குரி யோன்ரகுநாதன் பிறங்கலன்னீர்
கைம்மான்குதிக்கறி யாதென்றுநீரொன் கலைமதிக்கு
ளிம்மான்குதிக்குமென் றேபிடித்தீர்கை யிரண்டினுமே. (அ)

ஆரத்தொடையிடை நீலமிட்டாங்களி தோயுமுல்லை
வீரத்தொடைபுனை வோன்ரகுநாயகன் வெற்பனையீர்
மாரத்தொடைக்குண் முகைத்தாமரைவிட்டு வன்கொலைசூழ்
கோரத்தொடையென வோபுதைத்தீர்கைக் குவலயமே. (கூ)

நடைநிலஞ்சாதி குலமோட்றிவங்க நல்லதந்திப்
படையணிசேர்முன் றிலான்ரகுநாதன் பணிவளாவாய்க்
குடையலர்காந்தளம் பூம்போதுதன்னைக் குறிஞ்சியெங்கோ
னுடையதண்போதென்ன வோவிழியூடுகொண் டொத்தியதே. (௰)

இயலைத்தலைபெற்ற முத்தமிழ்வாணர்க் கெழுமட்ங்கு
புயலைப்பொருவுகை யான்ரகுநாதன் பொருப்பனையீர்
முயலைத்தவிர்த்த மதியூடுலாவிய மூரிவரிக்
கயலைப்பிடிப்பதென் னேகுறமாதர் களிறிகழ்ந்தே. (௰க)

வளைசேர்மருமத் திருவஞ்சியாட் மணியுஞ்சளாம்
விளைசேர்தளவத் தொடைரகுநாயகன் வெற்பிலின்ப
வுளைசேர்தமனியப் பாவாய்செந்தேனங்கை யூடுறமின்
னிளைசேரமிர்த கடத்தையென்னேவிட்டு நிறகின்றதே. (௰உ)

பாகந்தருமிசை வல்லோர்க்குமான்மதம் பாய்தருகை
மேகந்தருதள வாய்ரகுநாயகன் வெற்பிலிந்திர
போகந்தருகளி யானையிலேறுமென் புந்தியின்ப
மோகந்தருகிளி யேதிட்டிசேர்தன் முறையல்லவே. (௰௩)

நாகஞ்செறிமலர்ப் பூங்காவும்பொய்கையு நான்மறையும்
நாகஞ்செறிதமிழ்த் தேவையர்கோன்ரகு நாதன்வெற்பில்
நாகஞ்செறிகின்ற தென்மதிசாயநற் பார்வைதன்னை
நாகஞ்செறிவஞ்சி யாய்மறைத்தாயது நன்றலவே. (௰ச)

மாவானசூர னிருப்பையெல்லாமத்தி வாய்க்குதவுந்
தேவானவனைப் பணிரகுநாதன் சிலம்பிலென்மேற்
காவானபைங்குழ லீர்படிறேமென்று கைகளினாற்
பூவானதுந்தடுத் தீர்விடுத்தீர்பொற் பொருப்பினையே. (௰ரு)

தார்கொண்டபாடலம் பேரோடையாம்ப றருங்கமலச்
சீர்கொண்டசெங்கரத் தான்ரகுநாயகன் றேவைவெற்பி
லேர்கொண்டநீல மட்டலேறுகைபெரி தீனமன்றோ
வார்கொண்டகொம்மைப் புளகப்பட்டாமுலை வஞ்சியர்க்கே. (௰சு)

தன்னம்புயத்திற் குவலயந்தார்முல்லை தாங்கிமன்னர்
சின்னம்பறித்த ரகுநாதன்றேவைச் சிலம்பிலின்று
பொன்னங்குடத்தை யெதிர்காண்டலென்னமைப் போதுங்கண்டார்
கன்னங்கறுத்த குழலாய்நற்காரியங் கைப்பலனே. (௰௭)

செந்தாதும்பூவுஞ் சுருதிவண்டார்ப்பத் தினம்பொழியு
மந்தாரமன்னகை யானரகுநாதன் மழவையன்னீர்
நந்தாமணம்பெற வந்தேனுக்கின்று நறியமல
ரந்தாமரையொளித் தீரளித்தீர்சிற் றரும்பினையே, (௰௮)

பாரேழ்கழனியும் வாடாதுதன்மப் பயிர்விளைக்குங்
காரேயனைய ரகுநாதன்றேவைக் கனங்குழையீர்
நீரேபொறிவெம் பட்நாகங்கைவிட்டு நின்றுவெய்ய
சூரேபுரிநஞ்ச மெவ்வாறுகையிற் றொடுகின்றதே. (௰௯)

யாழுங்குழலும் பசுந்தேனும்பாகு மிசைந்துகுடி
வாழுந்திருமொழி யாய்ரகுநாதன் மணவைவண்டு
சூழுங்களப முலையானைமுன்னித் துயர்க்கடல்வாய்
வீழுங்கொடுமையெல் லாங்கண்டிலார்செங்கை வேலவரே. (௨௰)

நீலக்கரும்புய ரூராகணம்வெண் ணிலாவணிந்து
ஞாலத்துவந்தமின் னேதளவாய்ரகு நாதன்வரைக்
கோலத்தினைக்கு ளினமென்றுமானினங் கூடுமென்றோ
சாலப்புதைத்துநின் றாய்செங்கண்வேழந் தருங்கொங்கையே. (௨௧)

சேயென்றுவந்த தளவாய்க்குநாவலந் தீவிற்குமோர்
தாயென்றுவந்த ரகுநாதன்றேவைத் தமிழ்வரைமேற்
காயென்றுவில்வக் கனியளித்தீரென் கலைமதிக்கு
வாயென்றுசற்று மலராதுபாணிக்குண் மைம்மலரே. (௨௨)

கோட்டந்தவிர்த்த குடைமன்னர்கேசரி கூட்டமன்ன
ராட்டந்தவிர்த்த ரகுநாதன்வெற்பிலென் னாருயிர்க்கு
வாட்டந்தவிர்த்த வரிவிழியார்மறைத் தருளி
னீட்டந்தவிர்ப்பதென் னேகுன்றவாண ரிளங்கொடியே. (௨௩)

ககராசவீரவெங் கேதனத்தான்கந்த மாதனப்பொன்
னகராசன்வீரைக் கிறைதளவாய்ரகு நாதன்வரைச்
சிகராசலத்தின் மலராதநீதி தெளிந்துகொண்டோ
மகராலயத்தின் மலரவைத்தீர்செம் மலர்க்கஞ்சமே. (௨௪)

கம்பக்கருணையங் தேனூறுஞானக் கனியருள்சே
ரும்பர்க்கரசனை யான்ரகுநாத னுயர்வரைவாய்
விம்பக்கனியித ழீர்மணிமார்பில்வெங் கோடுடைய
கும்பக்கரிகொடி தாம்விலக்கிர்மத குஞ்சரமே. (௨௫)

தொடைபெற்றகொண்டல் பிறையிளநீர்சுமந் தோதிமத்தி
னடைபெற்றகன்னிக் கரும்பனையாய்ரகு நாயகன்வேற்
படைபெற்றசெங்கையும் வேழமுமாய்நிற்றல் பார்த்துமதிக்
குடைபெற்றவெய்யவ னெய்யவன்போர்க்குறி கொண்டனனே. (௨௬)

கீதங்குழல்கஞ்சம் வீணைதடாரி கிளந்தபஞ்ச
நாதஞ்சிலம்பிய தேவையர்கோன்ரகு நாதன்வரைக்
காதங்கமழ்குழ லீரொனதாவி கலக்கில்வரு
மேதம்பெரிதென்ன வோமறைத்தீரின் றிணைக்கயலே (௨௭)

பண்மூடியசெங் கனியிதழீரொழு பாரகந்தன்
னுண்மூடியபுக ழான்ரகுநாத னுயர்வரைவாய்க்
கண்மூடியோகியர் போலநின்றீரிக் கருத்தினுக்கு
விண்மூடியவரை கைவிடிலேதம் விளைவிக்குமே (௨௮)

மேகந்தருமணி வெண்முத்தராசியின் மென்மலர்ப்புன்
னாகந்தருகடற் றேவையர்கோன்ரகு நாதன்வெற்பி
லேகந்தருபதின் மூன்றெண்பதான்மறைத் திங்குநின்றீ
ராகந்தருமைந்து மொன்பதுமேவெளி யாகியதே. (௨௯)

பாவாய்நிறைகின்ற செம்பொருளோடுநற் பைம்பொருளு
நாவாய்தருகடற் றேவையர்கோன்ரகு நாதன்வரைப்
பூவாய்மனுமுறை யாலெமைவாழப் புரக்குமிளங்
கோவாயவரை யிறைமறைத்தாலது கொள்கையன்றே. (௩௰)

வில்லிளங்காளை மயில்காப்பமானை வெகுண்டெழுந்த
நல்லிளங்கேசரி தேவையர்கோன்ரகு நாதன்வரை
வல்லிளங்கோல மணிமுலைசால வருத்தும்வண்டு
புல்லிளங்காமர் விரிந்தசெங்காந்தட் புதுமலரோ (௩௧)

கல்லொன்றிரண்டிள நீர்தாங்கிமுன்வரக் கண்டுமுனி
சொல்லென்றுநின்ற ரகுநாதன்றேவைச் சுரும்பின்மணி
வில்லொன்றுவாணுத லீர்செப்பினூட்டத்த மேவுமல்லா
லல்லொன்றுநீலக் கட லூடுசேர்ப்ப தறிவின்மையே. (௩௨)

பண்ணார்குதலைக் கனிவாய்சிவந்த பசுங்கிளியீர்
நண்ணார்சமரிற் புலிதளவாய்ரகு நாதன்வரைக்
கண்ணாரிணைக்கயன் மங்கலமாமெனக் கைக்கொண்டநீர்
தண்ணார்தரள மணிக்கும்பநீக்குத றக்கதன்றே (௩௩)

சந்தேறியதடஞ் சாரலிலாயிரந் தண்மதிபோ
னந்தேறியகந்த மரதனத்தான்ரகு நாதன்வரைக்
கொந்தேறியமலர் வாள்புனைந்தீர்மத் குஞ்சரந்தேன்
வந்தேறியமொழி யீர்புனைவீர்செங்கை மாமலரோ. (௩௪)

கார்பூத்தபுன்னைவெள் ளோதிமஞ்சீதரன் கைவளைபோ
லேர்பூத்ததேவையர் கோன்ரகுநாயக னேமவெற்பில்
வார்பூத்தபூண்முலை யீரறிந்தாய்ந்து மணப்பதற்கோ
தார்பூத்தசெங்கையி லேந்திநின் றீரின்ப சாகரமே. (௩௫)

பால்வாய்ப்பசுந்தமிழ் வீசியவாசம் பரந்தவைகைக்
கால்வாய்த்தவீரையர் கோன்ரகுநாதன் கரந்தைவெற்பின்
மேல்வாய்த்திருந்த வெழுத்தாறரிதின் விளங்குமென்றே
நூல்வாய்த்தநுண்ணிடை யீர்மறைத்தீரணி நோக்கினையே (௩௬)

ஆவியும்பூவுந் தகரமுந்தேனு மணிந்துநறு
நாவியுஞ்சேர்குழ லீர்தளவாய்ரகு நாதன்வரைக்
காவியங்கைபுனைந் தீர்விடுத்தீர்தனங் கஞ்சமலர்த்
தேவியும்போலநின் றீர்விருப்பேதுங்கள் சிந்தனைக்கே. (௩௭)

வாவிக்குளொற்றை வனசமென்றேதுமை வானிலங்கும்
காவிச்செழுங்குடை யான்ரகுநாயகன் காவிரிநாட்
டாவிக்குயிர்தந்த கோட்டூர்தொழுதன மப்படிநீர்
சேவிக்கநல்குங் கமலாலயமுத்தி சித்திக்கவே. (௩௮)

சங்கேகொடைத்தரு வேயெனவாழ்வ தருங்கருட
வெங்கேதனத்தள வாய்ரகுநாயகன் வீரைசுற்றும்
பங்கேருகத்தன மேயொளிசேர்தன பாரமலை
யிங்கேயிருக்கக் கட்டலேறினொன் னிறையவரோ (௩௯)

கன்னித்திரைச்சங்கு மிப்பியுமீனுங் கராவுமொளிர்
நன்னித்திலஞ்சொரி தேவையர்கோன்ரகு நாதன்வெற்பின்
மின்னிற்சிறந்தமின் னேகரிக்கோட்டுவெண் முத்திருக்க
மன்னித்திகழ்கஞ்ச முத்தமென்னேகை வளைகின்றதே. (௪௰)

போரயினுகம் புலிசிலைவாள்வெம் பொறிவழங்கு
மாரெயில்வீரையர் கோன்ரகுநாத னணிவரைக்கு
ணீரரணாகிய மைவேலைகைக்கொண்ட நேரிழையீர்
பேரரணான கிரிதுர்க்கநீக்குதல் பெண்புத்தியே. (௪௧)

திரையோங்குபாற்கடற் பூந்தாமரைச்செழுந் தேனிருக்கும்
வரையோங்குமார்பன் ரகுநாதன்றேவை மணிவரைமேல்
விரையோங்குபங்கயந் தாங்கியநீரிரு வெற்பொளித்தா
லுரையோங்குவிண்மணி யெண்மணி னீரொன் றரைசெய்வரோ. (௪௨)

மதிசேரமுத விதழியஞ்சீதள வாசவைகை
நதிசேர்தெளிபுனல் வீரையர்கோன்ரகு நாதன்வரைப்
பதிசேரிளமுலை சங்கிலிகாட்டும் பணியணிந்தாய்
துதிசேர்பரவையுங் காட்டிலென்போலில்லை சுந்தரனே. (௪௩)

முள்ளார்வெங்கானந் திரைவரைவான் முகடுசென்று
நள்ளார்புகவெஞ் சிலைகுனித்தோன்ரகு நாதன்வரைக்
கள்ளார்கருங்குழ லீர்கொடுங்கூற்றையுங் கையமைத்தீர்
புள்ளார்தமைவிலக் கீரெமைவாழப் புரக்கிலின்றே. (சச)

போற்றுங்கமடம் பணிகுலநாகம் பொறுத்தசுமை
யாற்றும்புயவரை யான்ரகுநாத னணிவரையீர்
தோற்றுங்கயலை மறைத்தீர்பொற்கஞ்சமுந் தோற்றுவித்தீர்
சாற்றும்பொழுதினி னீரோமதுரைத் தடம்பொய்கையே. (சரு)

நறைபெற்றமாலைக் கதிர்வேலுமாலுமெந் நாளுஞ்செவ்வி
யுறைபெற்றதேவை ரகுநாதன்வெற்பிலென் னுள்ளமென்னுங்
குறைபெற்றதாருவை மைந்நீலவண்டு குடைந்துதிரா
திறைபெற்றபோதமைத் தீர்வந்துசாய்க்கு மிபகுன்றமே. (சசு)

ஆடகமாமதில் வீரையர்கோன்வண் டலம்புமுல்லை
யேடலர்மாலிகை யான்ரகுநாயக னேமவெற்பிற்
கூடகமேவுகைக் கொண்டீர்குவலயந் தோகையன்னீர்
கூட்டலைவேண்டிவந் தேனளித்தீர்பரங் குன்றினையே. (சஎ)

கங்கமுஞ்சீனமுஞ் சோனகநாடுங் கலிங்கமும்போர்
வங்கமுஞ்சேர்முன் றிலான்ரகுநாதன் மணவைவரைச்
சிங்கமுஞ்சாய 'வருகரிப்போரிலென் சிற்றுயிரு
மங்கமுந்தேய்வது பார்த்திரங்காததென் னாரணங்கே. (சஅ)

நாலுந்துடியுங் கொடிமின்னுநாகமு நுண்மதியும்
போலுந்தளரிடை யாய்ரகுநாதன் புனற்கரந்தைச்
சேலுங்கமலமுங் காவியுமாவுந்தெவ் வேந்தைவென்ற
வேலும்பொருவும் விழியையெந்நாட்கண்டு மேவுவனே. (சகூ)

மல்குங்கிரண மணிசெம்பொன்வாரி மருங்கிருபா
னல்குந்திரைவைகை நாடனெங்கோன்ரகு நாதன்முறைப்
புல்கும்பதியில் விசும்பிடைநீண்டு புகுதருமீ
னெல்குந்துடியிடை தோற்றுதென்றேவின் றெளிக்கின்றதே. (ருய)

மகக்கண்ணிற்சில மறையோரைவாழ்வித்து வான்கொணர்ந்து
சகக்கண்ணிற்சேர்த்த ரகுநாதன்றேவைச் சயிலமன்னீர்
முகக்கண்ணிற்காண்ட லரிதென்பதோவிழி மூடியன்பா
லகக்கண்ணிற்காணப் பதிநோக்கினீர்நன் றறிவுமக்கே. (ருக)

மலைவேலிவையம் புரந்தசெங்கோன்மனு ராசன்மனுக்
கலைநூறெரிந்தவெங் கோன்ரகுநாதன் கரந்தைவெற்பிற்
றொலையாதிருந்தெம் மனத்தூடுதோன்றுந் துயர்தொலைக்கக்
கொலைவேலிருந்தகையாற் குறிப்பீர்மணிக் கொம்பினையே. (ருஉ)

தேசிகப்பொதணி சண்பகக்காடு திருந்திழையார்
நாசியொப்பாமலர் வீரையர்கோன்ரகு நாதன்வரைப்
பாசிழைப்பூவை முகைக்கோங்கில்வேட்டன்கைப் பாணமுற்றுற்
காசினிப்பாலுனைப் பாலையென்பார்கலை கற்றவரோ. (௫௩)

முகைகாட்டியமுன்றில் முல்லைநல்லார்தம் முகமதிவெண்
ணகைகாட்டியபுக லூர்த்தளவாய்ரகு நாதன்வரைத்
தகைகாட்டியசெவ் விளநீரிலம்புயஞ் சாரிலகிற்
புகைகாட்டியகுழ லான்போகிநீயும் புனலுலகே. (௫௪)

ஆடியதோகையன் னார்முகம்போன்மதி யம்பொனெயில்
சூடியகானைப் பதிரகுநாதன் சுரும்பில்வள
நீடியபெண்ணைக் குரும்பைகண்டேன்மலர் நெய்தல்கண்டால்
வாடியசிற்றிடை யிருமைப்போலு மணலுலகே. (௫௫)

கொத்தூர்குழலியர் கண்டமொப்பாவெழில் கொண்டமுத்தி
னத்தூர்கரந்தை ரகுநாயகன்செம்பி நாட்டுவரை
முத்தூர்மருப்பிற் கருவிளங்காணின் முளரிமல
ரொத்தூர்மதிமுகத திருமைக்கார்வெற் புலகென்பரோ. (௫௬)

தொடைகாட்டும் பூங்குழலார்நடைபோலிளந் தூவியன்ன
நடைகாட்டும்வைகையம் பூந்துறையான்ரகு நாதன்வெற்பி
லிடைகாட்டுநூல்வெற் பிளமுலைகாட்டு மிளங்கொடியீர்
படைகாட்டுமைவிழி கண்டொப்பேனிப் படிபென்னவே. (௫௭)

பூவளர்வாவிக் கமலமும்வீதியும் பொன்மனையு
மாவளர்தேவைப் பதிரகுநாதன் மணிவரைமேற்
கோவளர்தானத் தினங்கன்றுசேர்கை குறித்தமைத்தீர்
காவளர்பூவைக் கரசுமைப்போலெவர் காசினிக்கே. (௫௮)

அறங்காவல்கொண்ட மனுமுறையாலணி நாவசைந்து
கறங்காமணிமுன்றி லான்ரகுநாதன் கரந்தையன்னி
ருறங்காதவெங்கண் மதகரிபாயநெஞ் சூடுருவிப்
புறங்காணிலார்பொறுப் பார்விணைபாயப் பொறுக்கினுமே. (௫௯)

நங்காமதேனு வெனவந்தகார்செம்பி நாட்டனுயர்
செங்காவியங்குடை யான்ரகுநாதன் சிலம்பின்மிக்க
வெங்காமவெய்ய விடாய்க்கிளநீர்தந்து வெவ்விடத்தை
யங்காமவல்லிநல் லீர்மறைத்தீர்நன் றறிவுமக்கே. (௬௰)

நிலையேந்துமாளிகை மாளிகைமாதர்க ணெஞ்சமதிக்
கலையேந்துந்தேவை ரகுநாதன்வெற்பில்வெங் கள்ளைவரிச்
சிலையேந்தும்வாணுத லீரங்கையேந்துஞ் செயலிதென்னோ
விளையேந்துமாணிக்க வள்ளமிங்கேவைத்து மெய்ம்மறந்தே. (௬௧)

பொற்பணைவேழம் புரவிவெள்ளோதிமம் பூவையர்தோ
ணற்பணைமேவுங் கரந்தையர்கோன்ரகுநாதன்மணி
வெற்பணைவாழ்வெம தென்றேமறைத்துமை வேலைவளர்
கற்பணைதோகை மயிலேலவரைவளங் காட்டியதே. (௬௨)

வீரைக்குள்வந்தசிந் தாமணிநீதி விளங்கவெழு
பாரைப்புரந்த ரகுநாதன்வெற்பிற் பகலில்விண்சேர்
தாரைக்குலம்புவி காணவொண்ணாதெனுந் தன்மைகொண்டோ
வாரைச்சுமந்த தனத்தால்நின்செங்கை மறைக்கின்றதே. (௬௩)

வழியும்பிரச மலர்முல்லையான்வைய மேழும்பொய்யும்
பழியுந்தவிர்த்த ரகுநாதசேது பதிவரையீர்
மொழியுங்குவலயம் பாணியினாலின்று மூட்டவந்து
சுழியுந்திரையுங் குமிழியுந்தோன்றித் துயர்செய்யுமே. (௬௪)

சத்தந்தெளிக்குங் கலைவாணர்சங்கத் தமிழ்க்குருகிச்
சித்தங்களிக்கும் ரகுநாதன்றேவைச் சிலம்பின்மணி
முத்தம்பதிக்கும்பவளச்செவ்வாயிள மூரன்மின்னே
யத்தந்தனக்குக் கடல்பொருத்தாதென்ப ராய்ந்தவரோ. (௬௫)

முந்நீர்சொரிமுத்த மாணிக்கராசி முகந்தருவி
றன்னீர்சொரிகந்த மாதனத்தான்ரகு நாதன்வரைப்
பொன்னீர்பவளத் தமுதெமக்கீயும் பொழுதினஞ்சு
தன்னீர்தருமென் வோமறைத்தீர்செழுந் தாமரைக்கே. (௬௬)

மானார்விழியென மைந்நீலம்பூத்த வயற்புகலூர்
ஞானாகரனிசை சேர்தளவாய்ரகு நாதன்வரைக்
கானார்கருங்குழ லீர்சுறவார்கடல் கைப்படுத்தி
ரானால்விடுத்ததென் னீர்வரையீழத் தகலிடமே. (௬௭)

நல்லார்நகைக்கு மனைவளர்தாளி நனைமலரு
மல்லார்கரந்தை ரகுநாதன்றேவை வரையின்மணிக்
கல்லார்கனங்குழை யீர்மருண்டீரின்று கண்டசர
மெல்லார்வரிவளைக் கைபுனைந்தீர்குரு கெய்தவுமே. (௬௮)

ஆரியர்போற்று மிராமேசர்தாளிணைக் கன்புவைத்த
சூரியன்வீரையர் கோன்ரகுநாதன் சுரும்பிலின்று
கூரியவாளிரண் டங்கையிலேந்திய கொங்கையிளங்
காரிகையீருமை மாதங்கியாரென்பர் கண்டவரோ. (௬௯)

வாளும்பரசும் வயிரமுமேகொண்டு மாற்றலரை
யாளுந்தனிவடி வேல்ரகுநாத னணிவரையீர்
தோளுங்கரும்பு மெனதாருயிர்வந்து சூறைகொள்ள
நீளுங்கணைகொண்டு நின்றாலெவ்வாறுயிர் நிற்கின்றதே. (௭௰)

இலையேதழைத்துக் கொழுங்கனல்பூத்திகல் காய்த்துவெய்ய
கொலையேபழுத்தசெவ் வேல்ரகுநாதனைக் கூடலர்போன்
மலையேயெனக்களித் தீர்கட்டலேறுகை வாய்த்துநின்றீர்
சிலையேபடைத்த நுதலீர்திகைத்ததென் சிந்தனையே. (௭௧)

நெய்வாய்த்திகன்மன்னர் சோரியின்மூழ்கி நிணமருந்து
மைவாய்த்தவேற்படை யான்ரகுநாதன் மணவையன்னீர்
மெய்வாய்த்தகோல வனமுலையார்தம்மை விட்டுவளைக்
கைவாய்த்தமைவிழி யாருடன்சேர்தல் கடனல்லவே. (௭௨)

செம்பேந்தியமதில் வீரையர்கோன்முச் செகமனைத்து
நம்பேந்திவாழு மனுமுறையான்ரகு நாதன்வெற்பி
லம்பேந்திநிற்பதுங் கண்டேனினியுன்ற னங்கையினும்
கொம்பேந்திநின்றென் னிடையூறுதீரக் குறிக்கொள்ளுமே. (௭௩)

பாவுக்கிசையும்பெயரோபுனைந்துமெய்ப் பாவலர்தங்
நாவுக்கிசையும் பெரும்புகழான்ரகு நாதன்வரைக்
கோவுக்கிறையின் றளித்தீரெமக்குக் கொடுத்தவிரு
மாவுக்கிறையிலி செய்தீர்புகழும் வகையறிந்தே. (௭௪)

தாருஞ்சிலையுங் கலவையும்பூணுந் தருந்தருவுங்
காரும்பொருவுகை யான்ரகுநாதன் கரந்தையன்னீர்
வாருந்துவண்ட மருங்குலுநாளும் வருந்தலைநீர்
பாருங்கொடிது கொடிதுகண்டீரிப் பணைமுலையே. (௭௫)

கார்த்தலந்தோயுங் கொடிமதில்சூழுங் கரந்தையர்கோன்
பார்த்தலம்போற்றும் ரகுநாதன்வெற்பிற் பசுங்கதிர்ப்பூண்
சேர்த்தலங்காரித்த மின்னேயினிமைச் செந்தேனிங்ஙனே
கூர்த்தலங்கைத்தல மேவியவாறு கொடுமையின்றே. (௭௬)

மடற்கேதகைசுற்றுந் தேவையர்கோன்வய மன்னர்க்கெல்லா
மடற்கேசரிதள வாய்ரகுநாத னணிவரையீர்
விடற்கேதுணிவுற் றிருநாகமும்வெளி விட்டுவெங்கட்
கடற்கேதிருநெடும் பூட்கைதந்தீரென்ன காரணமே. (௭௭)

மேவியதூதின் மெலிவுரைத்தேயன்று மெய்த்தரும
னேவியமேகம் ரகுநாதன்றேவையி லெண்டிசையுந்
தாவியசெங்கண் மடப்பிணைக்கேயிறை தாவவுயி
ரோவியநீகொடுத் தாலென்செய்யாதிவ் வுலகினையே. (௭௮)

சொற்பேறுபெற்ற தளவாயெனுந்துரை ராயனரு
ணற்பேறுதேவை ரகுநாயகன்செம்பி நாட்டிலுயர்
வெற்பேறவிட்டுத் துணையார்கண்ணேணி விரைந்தொளித்தா
லற்பேறுநெஞ்ச மினியென்படாதுபெண் ணாரமுதே (௭௯)

கோங்கர்முகிழ்முலைக் கொம்பரன்னீரண்ட கோளமெல்லா
நீங்காதமெய்ப்புக ழான்ரகுநாத னெடுங்கரந்தைப்
பாங்கார்கொடிக்கய ருங்காநின்றீர்தண் பயோதரத்தே
தீங்காந்தளையிடி லாங்காண்மதிகுலத் தென்னவரோ. (௮௰)

தூதேநடந்த கவிகுலமாமணி தோன்றுகொடி
வீதேயுயர்த்த ரகுநாயகன்றமிழ் வீணையிலிப்
போதேவனத்தி னிறைகங்கைமேவப் புரிந்ததனுன்
மாதேயுனையுஞ் சொலலாம்ரவிகுல மன்னனென்றே. (௮௧)

செய்க்கஞ்சனந்தம் பயில்செம்பிநாட்டன் சினவடிவேற்
பொய்க்கஞ்சனந்தப் பொருரகுநாதன் பொலங்கிரிமேன்
மெய்க்கஞ்சனந்தகு மின்னேயதிசய மெல்லியளின்
கைக்கஞ்சனந்தங் கவிங்கெனக்கேதனங் கண்ணுற்றதே. (௮௨)

கண்டேயெனுஞ்செங் கனிமொழியீர்சிலைக் கார்விசயன்
றிண்டேர்கடவும் ரகுநாதன்வெற்பிற் செந்தாமரைமேற்
கொண்டேகுவளை யிருத்தல்கண்டேனக் குவளையின்மேல்
வண்டேய்கமலமுங் கண்டேனிதுவென்ன மாயங்களே. (௮௩)

நீதந்தாத தளவாய்குமார னெடுங்கருட்
கேதனங்கொண்ட ரகுநாதன்றேவைக் கிளர்ந்தகந்த
மாதனங்கண்டுவந் தேன்றனுக்கோடி வளைகடலைப்
போதனம்போனடையீர் கண்டுநானுடல் பூரிப்பதே. (௮௪)

ஊனிட்டமானபுனை வேற்பகைதிகைத் தோடிநெடுங்
கானிட்டமாகவென் றோன்ரகுநாயகன் கந்தகிரித்
தேனிட்டமாமொழி யீர்கணப்போதிற் செறிவிலங்கை
மானிட்டமாக்கிவிட் டருமைப்போலெவர் வல்லவரோ. (௮௫)

கானேர்பொருப்பு மருவியும்போற்கமழ் முல்லையந்தார்
தானேவிளங்கும் புயரகுநாதன் றமிழ்க்கரந்தைத்
தேனேவளவ னிலைமைவிட்டேசென்று தென்பொதிய
மானேரடைதனன் றேபுண்டரீக மணிக்கொடியே. (௮௬)

சீலத்துமிக்க தளவாயளித்தருள் செல்வனொரு
காலத்தும்பொய்யுரை யான்ரகுநாதன் கரந்தைநகர்
போலத்துலங்கும் பொலங்குழையீர்சென்று பூம்புனறே
யாலத்துமாந்தளிர் கண்டோமிதுவென்ன வற்புதமே. (௮௭)

நடுப்பதுமாலய மார்தனையாய்நடை கற்றவன்றே
கொடுப்பதுங்கற்ற ரகுநாதன்றேவைக் குவட்டின்மத
னெடுப்பதுமெய்வதும் பாராய்வளைதரு மிக்கையினி
லடுப்பதுங்கஞ்சத் தரும்பாகும்வேலுக் கழகல்லவே. (௮௮)

மெய்ம்மலராசன மின்னுன்மிதிலையில் வில்வளைத்த
கைம்மலர்மேகந் துரைரகுநாதன் கரந்தைவெற்பிற்
செம்மலர்மேவவுந் தேனுளதேயன்றித் தேனிடத்தி
லம்மலர்தோற்றும் கொல்லோசொல்லுவாய்முல்லை யாரணங்கே. ௫௯

வணங்காததெவ்வைப் பொருமால்சொரிமுத்து வன்னியன்பொன்
னணங்காருமார்பன் ரகுநாதன்றேவை யணிவரைமேற்
குணங்காதலிக்கு நெடுமீனந்தன்னுடன் கூடியபத்த
மிணங்காதிணங்கு மழியாதகன்னி யிளம்பிடியே. (௬௰)

முறையுந்தருமமு நீங்காதமான்மும் முரசுமன்னர்
திறையுந்தருமுன் றிலான்ரகுநாயகன் றேவைவெற்பி
னிறையுங்கமலத் திருப்பதலலாலிந்திர நீலத்தின்மே
லிறையுங்குடிபுக் கிருப்பதுண்டோபுவி யேழினுமே. (௬௧)

கலைக்கேநெடுங்கட் லன்னனைக்கலங் காத்தவன்செஞ்
சிலைக்கேவிசயன் ரகுநாயகன்றமிழ்த் தேவையிலா
விலைக்கேகருங்கொழுந் தேந்துமின்னேகுன்றி யற்கையன்றோ
வலைக்கேவளர்வதென்றோ சங்கபாணி யமர்கின்றதே. (௬௨)

பணையேதடங்கண் டுயிலாதவினைப் பதியுரக
வணையேதுயிலும் ரகுநாதன்வெற்பிலென் னுருயிர்க்குத்
துணையேயுனைவந் திரந்தெற்குவெந்துயர் தோன்றவடிக்
கணையேபிடித்துச் சிலைவிடுத்தாய்கற்ற கல்விநன்றே. (௬௩)

நெய்க்கின்றகூந்தற் கொடியிடையீர்மனு நீதியினன்
மெய்க்கின்றவாய்மை ரகுநாயகன்கந்த வெற்பிலப்போ
துய்க்கின்றமான்மறி யும்புண்டரீகமு மோரிடைநீர்
வைக்கின்றநீதியி னல்லணையோவஞ்சி மன்னனுமே. (௬௪)

பிறியாததெவ்வர்க்கும் பின்னிட்டபேர்க்கும் பிறங்கிலவே
லெறியாதவன்ரகு நாயகன்றேவையி லென்றுங்கண்டே
யறியாதசிற்றிடை யீர்பொருந்தாரை யடக்கியநீர்
பொறியாதுவிட்டதென்னோ பொறிசூழ்ந்தபொற் கோட்டையின்றே()

காரணவுங்கொடை வினாயர்கோனன்று கஞ்சன்விட்ட
வாரணம்வென்ற ரகுநாதன்வெற்பின் மணக்குறிபோற்
றோரணமுத்தத் தொடுமாவிளந்தளிர் தோன்றவெதிர்
பூரணகும்பம் வைத்தாய்மலர்வீட்டிற் பொலங்கொடியே. (௬௬)

அலம்பணிவினை புடைசூழும்வினைக் கதிபனெழு
தலம்பணிதேவையர் கோன்ரகுநாதன் றமிழ்க்கரந்தைப்
புலம்பணிமேகலைப் பொன்னேமறந்துங்கைப் போதின்மின்னார்
சிலம்பணியாரென்ப தோவரிபாய்வண்டு சோக்கின்றதே. (௬௭)

நிதிகொண்டவண்மைத் தளவாய்குமாரனி லந்தழைக்குந்
துதிகொண்டதேவை ரகுநாதன்மால்வரைத் தோகையன்னீர்
கதிகொண்டுதாமரை தாங்கிநின்றீர்செங் கலசவிம்ப
மதிகொண்டுதாங்குமின் மாலாமெனக்கலர் மாதென்னவே. (௯௮)

மழையணிவார்குழன் மின்னிடைமாதர் மருளவிசைக்
கழையணிதேவை ரகுநாதன்வெற்பிற் கதிரொளியோ
டுழையணியாழின் விரலாலிசைத்துள் ளுருக்குதலாற்
றழையணிகானத் தவரெனும்வாய்மை தகுமுமக்கே. (௯௯)

முத்திக்குவேலி தழைக்கின்றதேவை முதல்வனருட்
பத்திக்குவாய்த்த ரகுநாதசேது பதிவரைமே
லெத்திக்குங்கண்டறி யோமணங்கேபச் செனுங்குழைசே
ரத்திக்குஞ்செம்மலர் காட்டிநின்றாயின் றதிசயமே. (௱)

மையாழிவையம் புகழ்செம்பிநாட்டன் மறந்தும்பொய்யா
மெய்யால்விளங்கும் ரகுநாதன்வெற்பில்வெங் கோவடையக்
கையாரவேநின் றிசைத்திடக்குன்றங் கவிகைசெய்தாற்
பொய்யாதுனைச்சொல்ல லாங்கண்ணனென்று பூங்கொடியே. (௱௧)

பல்வுங்கமுகும் பசும்பனிக்கோடும் படைத்துநின்று
நிலவுங்கரந்தை ரகுநாதன்காக்கு நெறியியல்பா
மிலவுந்துகிரும் பொருமிதழாய்நின் னிருகையினுங்
குலவும்படிசெங் கதிர்மாழையேந்திக் குலாவுவதே. (௱௨)

காக்குங்கருணையுங் கல்வியும்வாழ்வுங் கவிமதுர
வாக்குந்தழைத்த ரகுநாதன்றேவை வருவிருந்தாத்
தேக்கும்படிகனி வாயமுதாரவந் தேற்கினிமை
நோக்கந்தனைமறைத் தாலியல்போவஞ்சி நுண்ணிடையே. (௱௩)

பன்னுந்தமிழ்ப்பயிர் வாடாதுமாரியிப் பாரின்முத்தும்
பொன்னுஞ்சொரியும் ரகுநாதன்றேவைப் பொருப்பிலுயர்
மன்னும்பெரிய வரைநீத்துறுகண் மருவுகையாற்
பின்னுங்குழலணங் கேயறிந்தேனுன்றன் பேதைமையே. (௱௪)

தெளியேகவெண்குடைட் தன்னாற்குளிர்செக மேழுமிசை
யொளியேபரவும் ரகுநாதன்றேவையி லோங்குபசுங்
கிளியேயெனுமொழி யீரிரங்கார்தின்று கேழ்கிளர்தண்
ணளியேமறைத்த தனாற்கொடியாரொன் றறிந்தனமே. (௱௫)

வேரிப்பசுந்துணர் வார்குழலீர்கலி வெப்பொழிக்கு
மாரிப்பருவம் ரகுநாதன்றேவையில் வண்குடத்தே
பூரிப்பநெஞ்சிற் கருதாமனஞ்சிற் புரிந்ததுகை
நீரிப்படிகலந் தாற்பிறிதேது நிகழ்த்துவதே. (௱௬)

ஆர்க்குங்கலாப மயிலனையீர்ப்கி ரண்டமெல்லாம்
போர்க்கும்புகழ்தள வாய்ரகுநாதன் பொருப்பிலணி
சேர்க்குந்தனங்கண் மலைபோற்கண்மூடித் திறக்குமுன்னே
பார்க்கும்படியிப் படிக்கண்டிலேமொரு பாரினுமே. (௱௭)

திவளக்களிவண் டிசைபாட்த்தானந் தினம்பொழியுங்
கவளக்கடாசலத் தான்ரகுநாதன் கரந்தையன்னீர்
தவளக்குளிர்முத்த மல்லாமலத்தந் தனிற்சிறந்த
பவளக்குலமும் படுவதுண்டோமலர்ப் பங்கயத்தே. (௱௮)

பொன்னுருயிர்விட்ச் செங்கையில்வேலை யுறைவிடுங்கைப்
பொன்னுடர்தாரு ரகுநாதன் றேவைப்பொலங்கிரிவேள்
வின்னுண்மறைத்த கரும்பனையீரந்த வேள்வனச
வன்னுண்முகையென் கொலோவினையே னுயிர்வாட்டுவதே. (௱௯)

சினத்தாமரையசொல் லாந்தனையே தொழச்செங்கடுக்கை
யினத்தாமரைத்தொழு மால்ரகுநாதனை யெண்ணலர்போங்
கனத்தாமரையிருள் வார்குழலீர்கட் கருஞ்சுரும்பென்
மனத்தாமரைபுகு மென்றேகையார மறைக்கின்றதே. (௱௰)

கள

கு-யார்வணங்குந் தளவாய்குமாரன் செந்தாமரையாள்
பிரியாததேவை ரகுநாதன்வெற்பி லென்பேரறிவாம்
விரியாழிமாயக் கயல்குடியாது விலக்கியபின்
கிரியாலுழக்குத னன்றேமழலைக் கிளிமொழியே. (௱௰௧)

சீதக்கமல வயற்றேவை காவலன்செந்தமிழுங்
கீதக்கலையும் வல்லான்ரகுநாதன் கிரியினெடுங்
காதற்கடல்வெள்ள நீந்துதற்கே குடங்காட்டியநீ
பேதக்கவலை யொளித்ததென்னோ புகல்பெண்கொடியே. (௱௰௨)

மொய்தோய்ப்பகைஞர் வரையுரம்பாய்ந்து முழைப்படுத்துன்
கைதோய்கடாசலத்தான் ரகுநாதன் கரந்தைவெற்பின்
மெய்தோயநின்ற வுயிர்வாடுமென்பதும் விட்டிங்ஙனே
மைதோய்மழைக்கண் மறைத்தனன்றேசிலை வாணுதலே. (௱௰௩)

வயத்துக்கிசைந்த புகழ்தளவாய்தந்த மைந்தன்மிக்க
செயத்துக்கொருதுங்க வேள்ரகுநாயகன் றேவையிலம்
புயத்துக்குவலயந் தார்புனைந்தீரிப் பொறையமைத்தா
னயத்துத்தருமனென்றே மடவீர்சொல்லு நானிலமே. (௱௰௪)

சேல்கொண்டநீலக் கடல்சிவப்பேறச் சிலைதிணித்துக்
கால்கொண்டதேவை ரகுநாதன்வெற்பிற் கருவிளம்பூ
மேல்கொண்டகாந்தட் குலத்தோடுகூட் விளங்கிழையீர்
மால்கொண்டகாலத்து மென்னேமணக்க மலர்ந்திலவே. (௱௰௫)

திரைவந்தமுத்தும் வரைவந்தபொன்னுந் தெவ்வேந்தர்தந்து
நிரைவந்துபோற்றும் ரகுநாதன்றேவையி னேரிழையீ
ருரைவந்துதேற்ற வுணர்த்தீரொன்னெஞ்ச முழலவைத்த
வலைவந்தலரியென் கண்ணானதென்னகண் மாயமிதே. (௱௰௬)

வெங்கயங்கேதம் பொருந்தாதருள்புகழ் வேந்துயர்த்த
செங்கைபங்கேதன மால்ரகுநாயகன் றேவைவெற்பிற்
பங்கபங்கேகபம் போல்வீரமுதம் பசுங்கனின்ற
கொங்கையிங்கேவிட் டிருந்ததென்னேகண் குவலயத்தே. (௱௰௭)

சுனைப்பாரமுட்குட மூற்றுசெந்தேறல் சுளைப்பரந்து
திளைப்பார்கரங்கை ரகுநாயகன்றமிழ்த் தேவையன்னீர்
முளைப்பாரையென்னும் புதைக்கப்படாதென்று மூதுணர்ந்தோர்
விளைப்பாரையின்று புதைத்தேதன்றை விடுகின்றதே. (௱௰௮)

வங்கந்தழுவுங் கடல்சூழுந்தேவைக்கு வாய்த்ததள
சிங்கங்கருணை ரகுநாதன்செம்பொற் சிலம்பின்மலர்க்
கொங்கங்கமழுங் குழலீர்முகத்தைக் குபேரனெனச்
சங்கம்பதுமமும் வேண்டுமென்றோ கண்ணிற்சார்கின்றதே. (௱௰௯)

கடந்தோய்மதகளி றன்னனந்தம் பரகண்டன்முத்து
வடந்தோய்தனத்தியர் வேள்ரகுநாதன் வரையணியீர்
தடந்தோயமுற்க வமையாதென்றோ நிறந்தாழுமல
ரிடந்தோயவின்று மதுகரங்கூடி யிருக்கின்றதே. (௱௨௰)

சீதகங்காதரற் கன்பாம்ரவிகுல சேகரன்பூ
மாதகஞ்சேர்புயத்தான் ரகுநாதன் மணிவரைக்கோ
மேதகஞ்சேர்குழை யீரரிமாவொடு மெல்லியகைப்
போதகஞ்சேர்ந்த பகையில்லையோவுங்கள் பூம்புனத்தே. (௱௨௰௧)

தருபாற்புதுமுத்துந் தொன்னாள்வயிரமுந் தந்துதெவ்வ
ரிருபாற்பரவும் ரகுநாதன்றேவையி லேமவெற்பில்
வருபாற்குறுந்தொடி யீருலவாவிந்து மண்டலத்தே
யொருபாற்கரனண்ணி னாலென்படாதிவ் வுலகெங்குமே. (௱௨௰௨)

நேர்கின்றசிற்றிடை யீர்முகினீருண்ண நீட்டுகைம்மா
வூர்கின்றதேவை ரகுநாதன்வெற்பிலென் னுள்ளிரங்க
வார்கின்றவஞ்சனக் கண்மறைத்தீர்ந்த மாமறைத்தாற்
சார்கின்றபுண்டரி கத்தாலுமக்கென்ன தாழ்வுமக்கே. (௱௨௰௩)

தோடார்பசுங்குழை யீர்துரைராயன் சுரந்துநறை
யேடாருந்தாமன் ரகுநாதன்வெற்பி லிரவலர்க்கே
வீடார்துகுன்றத் திசையொளிதோன்ற விரும்பியத்தம்
வாடாதளித்தத னாற்சொலலாமுமை வள்ளலென்றே. (௱௨௰௪)

அதிராவிருந்த விருட்குநல்லார்கலி யாம்பனிக்குங்
கதிராயுதித்த ரகுநாதன்றேவையிற் கைம்மலர்க
ளெதிராயதாணுவிற் கேற்றலவஞ்ச மிமையவர்க்கு
முதிராததீஞ்சொற் கிளியேபுனைதன் முறையல்லவே. (௩௨௫)

வஞ்சத்திசைமன்ன ரோடிட்வாணர் வறுங்கலியு
மஞ்சக்கன்கந் தரும்ரகுநாத னருட்கரந்தை
நெஞ்சத்தின்மாலென் றுணர்ந்திக்குடந்தந்து நீர்மலர்ப்பூங்
கஞ்சத்திளந்திரு வென்றேநற்பாவையைக் கைக்கொண்டதே, (௩௨௬)

வெல்லும்பதாகைத் தளவாய்குமாரன்கை வேழமும்போர்
மல்லுங்கடந்த ரகுநாதன்றேவையில் வல்லவர்க்குப்
புல்லும்படையென்ப தோகொலைநாட்டம் புகைமறைத்துச்
சொல்லும்பொழுதணங் கேகுயத்தானுந் துயர்செய்வதே. (௩௨௭)

செங்கைத்தருவி னிசைவல்லிசேர்தள சிங்கமலர்
மங்கைக்கினிய ரகுநாதன்றேவையில் வார்க்கட்ங்காக்
கொங்கைக்குநேரில்லை யென்றேவிடுத்துவெங் கூர்விழிக்கு
மங்கைத்தலமின்று நேரொன்றுகாட்டிய தாரணங்கே. (௩௨௮)

களிக்குங்கயல்வெடி போயுயர்வானவெண் கங்கைத்தெண்ணீர்
குளிக்குங்கரந்தை ரகுநாதன்வெற்பிற் குவலயங்காத்
தளிக்கும்படிப்பெண் ணரசேதுணிவுற் றவ்வாழியுயி
ரொளிக்கும்படிவிட் லாமோநெறியன் றுனக்கிதுவே. (௩௨௯)

தட்மேவுதேவைப் பதிபுரப்போன்றள வாய்மகிழத்
திட்மேவுவெற்றி ரகுநாதன்வெற்பிற் சிறியவனு
வட்மேருவெற்புக் கெதிர்நிற்குமோவரி வாளரவப்
படமேவுமல்குன்மின் னேயுய்யுமாறின்று பார்த்தருளே. (௩௩௰)

வரமேந்துவெற்றி யரக்கர்பிரானுயிர் வாட்டவொற்றைச்
சரமேந்துதேவை ரகுநாயகன்றமிழ் வீரைவெற்பி
லுரமேந்துநுங்கள் குலத்தியல்போ வனத்தூடுவரக்
கரமேந்திநின்ற மடவீர்கலைகள வாகின்றதே. (௩௩௪)

வரிவளைநாலு மறுகூடுலாவி வயங்குமுத்தஞ்
சொரிதருதேவை ரகுநாதன்வெற்பிற் சுருதிபயின்
றறிவளர்பூங்குழ லாய்தமியேனையிங் காள்வதற்குக்
கரிவெளிதோன்றப் பிணையேன்றெட்ர்ந்தின்று கைக்கொள்வதே. ()

சொற்பாவலர்தங் கிளைவாழச்செம்பொன் சொரியும்வண்மை
நற்பேறுதேவை ரகுநாதன்வெற்பி னலந்தருமிப்
பொற்பாருநங்கையைச் சேர்ந்தாலுயிரைப் புரப்பதல்லால்
விற்பாவியமணி வெங்கரத்தூடென்சொல் வீழ்விப்பதே. (௩௩௩)

கார்த்தாமவார்குழ லீர்பசுந்தேனுமிழ் கானறுந்தார்
வேர்த்தாமமுல்லை ரகுநாயகன்றமிழ் வீரையன்னீர்

பார்த்தாதரவொடு பார்ப்பார்மறையிற் பரிந்தகத்தே
சேர்த்தாரொன்றேதனத் தாரிவவேதஞ் செயுந்துணிவே. (௱௩௪)

சிந்தாடவந்தவர் தம்மோடெழிலை தெரிந்துகொள்ள
வந்தாடவர்பணி மால்ரகுநாதன் வரையணங்கே
பந்தாடல்கண்டன ம்மானையாடலும் பார்க்கவரந்
தந்தாடல்செய்யி லுனக்கெய்துங்காண்வெகு தன்மங்களே. (௱௩௫)

இல்லாரைக்கற்பக மாக்கியுடைய ரெனினுமிகப்
பொல்லாரைக்கொல்லுஞ் செயரகுநாதன் பொருப்பனையீர்
வல்லாரைக்கற்ப வகையறிந்தேமுன்னு வாகட்மா
நல்லாரைக்கோரிய கையாந்தகரையு நாடுவமே. (௱௩௬)

விலைப்பாரரச ரறியக்குனித்திகல் வென்றுவந்த
சொலைப்பாவலர்புகழ் மால்ரகுநாதன் சொனவரைக்குந்
தலைப்பாகைதுண்டமென் சோமன்முன்வத்திரந் தனிற்கலந்தான்
மலைப்பாரமாவணச் சேலையிலாத மணமெனவே. (௱௩௭)

கண்டரிகம்பவு வாவைத்தெறலிற் கருதலர்வாள்
கொண்டரிகம்ப மிலாரகுநாத குபேரன்வரைப்
பண்டரிகம்புள மின்னேபொரவத்தம் பார்த்திருந்த
புண்டரிகம்பிணை மேற்பாயத்தந்தி புறப்பட்டதே. (௱௩௮)

தீனத்தைவென்ற கொடைப்புகழ்கேட்குஞ் செவிக்கமுத
பானத்தையொத்த ரகுநாதசேது பதிவரைவாய்க்
கானத்தைவானத்தை நேர்சொலிடையொரு கன்னியத்த
மீனத்தைநாடிச் செலக்கும்பராசி வெளிப்பட்டதே. (௱௩௯)

மஞ்சாங்கருதலர் போர்ப்படைமேற்சண்ட மாருதம்போல்
விஞ்சாங்கமூல பலரகுநாதன் வியன்சிலம்பிற்
பஞ்சாங்கமோதி மறைகாட்டிச்சொர்க்கமிப் பாற்படுத்தி
யஞ்சாங்குலத்தவர் பார்ப்பாரைச்சேர்ந்த ததிசயமே, (௱௪௰)

பொருப்பதெதிர்வரல் போற்கஞ்சனேல்வந்த போதகத்தின்
மருப்பதொசித்த சயரகுநாதன் மணியருவி
பருப்பதமீது மலருஞ்செங்காந்தள் பரவையிற்பூத்
திருப்பததிசயங் காண்குன்றவாண ரிளங்கொடியே. (௱௪௧)

நாலாயுதத்தை யிகன்மேற்றயித்தியர் ஞாட்பிலெதிர்
மாலாயுதத்தைப் புரிரகுநாதன் வரையணங்கே
வேலாயுதத்தைக் கைக்கொண்டுநின்று யெதிர்வெற்புமெய்தாற்
காலாயுதத்தைய னென்றெனையேதொழுங் காசினியே. (௱௪௨)

தொகுந்தளவாய்மகிழ் தெய்வீகத்தேவைத் துறைக்கரசச்
சகுந்தவிலோசனத் தான்ரகுநாதன் சயிலமின்னே
புகுந்திறையைவர் தெரியாமன்மச்ச புரத்திருக்க
மிகுந்துரியோதன பாரவணிகள் வெளிப்பட்டவே. (௱௪௩)

அங்ககலிங்க மலையாளமீழ மனைத்தும்வென்ற
சிங்கவிசய சயரகுநாதன் சிலம்பிற்பொன்னே
சங்கிலியாரையுங் கண்டேன்பரவை தனையுங்கண்டான்
மங்களசுந்தர னென்றெனையேதொழு மண்டலமே. (௱சச)

ஆலங்கையாத வமுதின்முன்னூண் டலகையைக்கொ
லேலங்கையாதருண் மால்ரகுநாதன் வெற்பேந்திழையீர்
சேலங்கைக்கொண்ட பின்னேமலையாளமுந் திண்டிக்கல்லைப்
போலங்கையாமஃ தில்லாதபோது புலப்படுமே. (௱சரு)

பாவூர்சங்கிராம விசைசூதர்பாடப் பவனிவரு
மாவூர்நகுல னெனும்ரகுநாதன் வரையனையீர்
கோவூர்முன்காட்டிய பின்குன்றத்தூர்வழி கூட்டியப்பா
லூர்நுங்காஞ்சி புரங்காட்டுதன்றேண்டை நாட்டியல்பே. (௱சசு)

எண்கட்டுமொனபுற் றேன்றுட்டலர்படை யேங்கவடுந்
திண்கட்டுவாங்கத் துரைரகுநாத வசிரன்வரைப்
பண்கட்டுமென்மொழி யீர்நீர்மிகவும் பலரறியக்
கண்கட்டுவித்தையுஞ் செப்பிடுவித்தையுங் கற்றவரோ. (௱சஎ)

தாவியங்கற்[illegible]லாமற்பொருதச் சமரிலறை
கூவியங்கத்திகல் வெல்ரகுநாத குமுணன்வெற்பி
[illegible]வியங்கற்பக வல்லியன்னீரிவ் வுலகியற்கை
காவியங்கற்றவர்க் கேயதமாகுங் கட்படமே. (௱சஅ)

கண்டரிதங்கை யுரத்தையுமூக்கையுங் காதையும்வாட்
கொண்டரிகொண்டல் ரகுநாதன்றேவைக் குலவரைப்பூ
வண்டரிகங்குற் குழலீர்நும்முந்தி மடியலையாற்
புண்டரிகங்கண் முழுகத்தெரியும் புளினங்களே. (௱சகூ)

நாளத்தையம்புய வன்னப்பணைச்செம்பி நாடன்சக்கிர
வாளத்தைவென்ற புயரகுநாதன் மணிவரைவேள்
காளத்தைவெல்லுமை நாடகப்பாவையைக் காட்டுஞ்சும்மா
தாளத்தையேந்திநின் றீர்மத்தளமுந் தருகுவனே. (௱ருய)

இட்டுகைமற்றை வலனுகைச்சாரி யியற்றிடுவாட்
டிட்டுகைவமெச் சியல்ரகுநாதன் சிலம்பிற்பெண்ணே
கட்டுகைத்தந்த வரையெதிரேவரக் கண்டுமுறி
யுடனேகொடுக்க வுடையார்பிணையை யொளிப்பதென்னே. (௱ருக)

படியுமமர ருலகமுமாசையும் பாதலமும்
கெடிகொளிசைரகு நாதவசிரன் கிரியணங்கே
கொடியுமுரசுங் கணையுஞ்சிலையுங் கொடாமலணி
முடிமாத்திரமத வேளுக்களித்தன் முறையல்லவே. (௱ருஉ)

கேட்டத்தகுவரு முட்குமதுகைக் கிளர்புலவர்
பாட்டத்தகுதி ரகுநாதசேது பதிவரைவாய்

நாட்டத்தகுவளை வேழங்குவளை நளினமல்லி
காட்டத்தருமிள நீரொன்றுகாட்டல் கணக்கல்லவே. (௱௫௩)

ஆரங்காசல மாநிதிவீரர்க் களித்திகன்மேற்
போரங்கமாக வருரகுநாதன் பொருப்பனையீர்
பேரங்கமாகும்ப கோணத்திற்பாதியைப் பின்மறைத்தீர்
சாரங்கபாணி யெனும்பேரெவ்வாறு தகுமுமக்கே. (௱௫௪)

சேண்டவர்வாழ்திருத் தேவையையாளுந் திருமணிமார்
பாண்டவர்தூதன் ரகுநாதன்சேது பதிவரைவாய்
நாண்டவர்முன்னிட் டதிலேயொளித்துத் தன்னற்பெயரைப்
பூண்டவர்தானத்தைத் தான்வாங்கிக்கொள்ளப் புறப்பட்டதே(௱௫௫)

விலையைமறைக்குங் கனககிரீடி விவேகத்தெண்ணெண்
கலையைமறைக்கு மனுரகுநாதன் கவின்வரைவாய்ச்
சிலையைமறைக்கு நுதலீர்முன்னாகத் தெரிதலின்றி
வலையைமறைத்துவைத் திர்பற்றவோசக்கிர வாகத்தையே. (௱௫௬)

படமினியார்வரைத் தெண்டிக்குங்காட்டேழிற் பார்த்திபன்கைத்
திடமினினீண்மந்திர வாள்ரகுநாதனற் றேவைவெற்பிற்
றொடமினியோங்கு மணியீர்மைவாரியைத் தூர்த்தபின்பு
குடமினியேதுக்கு நீரோவலியக் கொடுக்கினுமே. (௱௫௭)

வெம்பிற்கரள மெனக்காய்ந்திகலை விடுத்துத்தன்னை
நம்பிற்கருணை புரிரகுநாத நரேந்திரன்வெற்பிற்
கெம்பிற்கனக மணியணியீர்முனங் கேசவன்கை
யம்பிற்கரன்பட வெற்பரணங்க ளகப்பட்டவே. (௱௫௮)

வல்லாரங்காட்டிய பம்பரத்திற்சுழல் வாம்பரிமேற்
செல்லாரங்காட்டு முரரகுநாதன்றன் றேவைவெற்பில்
வில்லாரங்காட்டு மணியீர்மதிப்பு மிருந்ததனக்
கல்லாரங்காட்டிய நீரோகல்லாரமுங் காட்டினன்றே. ௱௫௯)

அலசத்தைவாளி யெனநேர்நவையை யகற்றியறி
நலசத்தையேகொண் மதியூகியாம்ரகு நாதன்வெற்பிற்
பலசத்தைநீடு முவரிமதித்தும் பருக்குவைத்த
கலசத்தைக்காட்டி யமுதத்தையேது கரந்ததுவே. (௱௬௰)

தவளையிற்செல்வளர் காவினிற்றுவத் தாளமுதிக்
கவளையிற்செல்செம்பி யர்ள்ரகுநாதன் கனகவரைத்
துவளையிற்செல்பவ ராமரையீர்மலர் தோறுந்திரி
குவளையிற்செல்வண்டு கோங்கிற்செல்லாததென் கூறுகவே. (௱௬௧)

வண்டிறகால வலர்முல்லையான்கவி வாணர்செய்யுட்
கொண்டிறவீகை தருரகுநாத குபேரன்வெற்பிற்
பண்டிறவாமருந் தன்னீர்வெந்தாகப் பசிதணிக்கக்
கண்டிறவாம லிளநீர்கொடுத்தென் கவையில்லை. (௱௬௨)

மித்திரமன்னர் மகிழப்பகைஞர்முன் வீழ்ந்துதொழச்
சத்திரமன்ன வருரகுநாதன் சயிலவெற்பிற்
சித்திரமன்ன குயிலேதனத்தைத் தெரியவைத்துப்
பத்திரமன்ன லறிவுறிற்சேதம் படைத்தவர்க்கே. (௱சுங)

தளையாடுகாலொட்டொன் ஞர்திறைகட்டுஞ் சமுகத்திற்பொற்
கிளையாடுதேவைத் துரைரகுநாத கிரீடிவெற்பில்
வளையாடுகைத்தலத் தீர்பாச்சிகைக்குண் மறைத்துமனம்
விளையாட்சூதின் கனகவட்டங்கள் வெளிப்பட்டவே. (௱சுச)

அனமிகத்தோன்று வயற்செம்பிநாட் டனயன்றந்தைவா
கனமிகத்தோன்று துசரகுநாதன் கனகவெற்பின்
மனமிகத்தோன்று மொருமாமலருண் மறைந்திடவி
தனமிகத்தோன்று மபிமானமுள்ளவர் தங்களுக்கே. (௱சுரு)

தேவுளிருக்கும் வளர்செம்பிநாட்டனற் றேவையையாள்
பூவுளிருக்கும் வளரகுநாதன் பொருப்பனமே
மாவுளிறைவர்க் கெதிர்வைத்துக்காணல் வழக்கிதன்றிக்
கோவுளிருக்கவிங் கேதுக்குமாலி குசக்கனியே. (௱சுசு)

சிற்றுலவட்டங் குடைகொடிசாமரை சேரப்புடைச்
நற்றுலமென்ன வருரகுநாதன் மைந்நாகமின்னே
கற்றூர்பணிநற் றிரிகூடவெற்பெதிர் காட்டித்திருக்
குற்றுலமாந்தல முங்காட்டிஞனிட்டை கூடுவனே. (௱சுஎ)

வில்வழக்கத்திற் றனஞ்சயன்கன்னன் விதுரனெனச்
சொல்வழக்கத் துரைமால்ரகுநாத சுகுணன்வெற்பிற்
செல்வழக்கக்குழ லீர்சாட்சிகைப்பத் திரமிவையில்
வல்வழக்கிட்டு வெளிப்படுவார்முழு வம்பர்களே. (௱சுஅ)

நிக்கிரகமேனே யநுக்கிரகமாமநு நீதிபுரி
யுக்கிரமகாதள வாய்ரகுநாதன்வெற் போதிமமே
சக்கிலியாயினர் பார்ப்பாருங்கைக்கொளச் சம்பந்தத்தா
லக்கிரமமென்று குயவரிதைவெளி யாக்கினரே. (௱சுகூ)

சொற்பதக்கற்பனே யோரெழுத்திற்கத்தஞ் சோர்வதிலா
மற்பதக்கத்தந் தருரகுநாத மகிபன்வெற்பி
னிற்பதக்கற்பக வல்லியன்னீர்வெகு நேத்திநுங்கைப்
பொற்பதக்கங்கொள மார்பிற்கடகம் புறப்பட்டதே. (௱எய)

பூமான்பெருஞ்செல்வம் பாமான்கலைகள் பொருட்கொடைக்குக்
காமான்கரதல மால்ரகுநாதன் கவின்வரைவாய்
மாமான்மதமபி லேயெதிர்கொள்பவர் வைத்தனரோ
கோமான்வெளிப்படு முன்னெதிர்பூரண கும்பங்களே. (௱எக)

விட்டங்கொடுக்கு முனிவைமுன்னம்பிய விட்டணற்குப்
பட்டங்கொடுக்கும் ரகுநாதசேது பதிவரைவாய்

வட்டங்கொடுக்கும் பணத்துக்குமேற்றனம் வண்டர்நட்பா
விட்டங்கொடுக்குமை மேனாட்டவர்க்கும்வந் தெய்தியதே. (௱௭௨)

நூலாயிருக்குநர்க் கத்தநிதஞ்சத நூறளிக்கு
மாலாயிருக்கும் ரகுநாதன்றேவை வரைமயிலே
மேலாயிருக்கினும் பார்ப்பாரிரவலர் மேலன்றிக்கீழ்
போலாயிருக்கினு மீகைத்தனத்தர் புரவலரோ. (௱௭௩)

போரூடுசென்று வலவனைப்போல்த்தை புத்திரற்குத்
தேரூர்சலதர மால்ரகுநாதனற் றேவையன்னீர்
நீரூர்மைநோக்கரும் வெட்கியொளிக்க நிதானத்திலே
யோரூசிமேலிரு பம்பரமாட்டு முபாயநன்றே. (௱௭௪)

திசைபுகழ்கன்னன் குபேரன்விசயன் சிபியெனச்சொல்
லிசைரகுநாதன் மணிவரைமானனை யீருமது
வசைதீர்கசகர்ன வித்தையைப்பார்த்து மகிழ்ந்தனமேற்
பசையுறுகோகர்ன வித்தையெப்போதினிப் பார்ப்பதுவே. (௱௭௫)

முடுக்கவருதிரண் மல்லினராவி முடியவறை
கொடுக்குமுராரகு நாதன்வரைமலர்க் கொம்பனையீர்
அடுக்குங்கொனீர்கணை யாழிமுகத்திட் ட்டக்கியபி
னிடுப்பினிற்குண்டல மார்பிற்சிலம்புவந் தேறியதே. (௱௭௬)

திட்டமுமுரமு மிசையுங்கொண்டச்சமுந் தீமையுங்க
பட்டுமொழுத்த ரகுநாதசேது பதிவரைவாய்க்
கெடவாத்தியமறி வித்திரிணியுங்கள் கீதத்தையு
மட்வீரறிவிக்கி னான்கொட்டிக்காட்டுவன் மத்தளமே. (௱௭௭)

சங்கையிலாம லிரப்போர்க்குதவ வுதாரநிதிப்
பங்கயமன்ன ரகுநாதசேது பதிவரைவாய்
மங்கைநல்லீரிது நல்லாச்சரியமுண் மையுங்கணைக்
கங்கைகட்குமுன் னேசித்திரகூடமென் கண்ணுற்றதே. (௱௭௮)

வைம்மையுடையகை வேலாலொன்னார்பொன் மணிமுடிக்குப்
பைம்மையறுத்த ரகுநாதசேது பதிவரைவாய்
நைம்மையுடைய நுசுப்பீர்வரச்சங்க நாடுவதிற்
கைம்மையுடையவர்க் கேனவளிமைபெய்தங் கச்சிமிழே. (௱௭௯)

இங்கிதரத்தினப் பகுதிகொணர்ந்துமு னெண்ணிமன்னர்
பங்கிடுமுற்ற ரகுநாதசேது பதிவரைவா
யங்கிதமாகத் தருசடகோபங்கண் டாச்சுதுமுன்
சங்கிடுதோளிட்ட சக்கரங்காட்டத் தருமினியே. (௱௮௰)

அலையுண்டிடநவ நீதந்திருடிமுன் னாய்ச்சியர்கைத்
தலையுண்டமெய்ரகு நாதன்சிலொச்சயத் தையனல்லீர்
வலைசெண்டுமீன்சொன் மதுரையடைத்து வரிமுன்வென்றீர்
திலையுண்டமேருவும் வென்றிடினீரந்தத் தென்னவரோ. (௱௮௧)

குமையவ்வரைநிமி ட்த்திலொன்னூர்மெய் குவியக்கைமேற்
சமையவரைநிரு பன்ரகுநாதன் றடவரைவா
யமையவரையுயர் சொக்கமுன்காட்டி யருளியநீ
ரிமையவரையொளிக் கத்தகுமோசொலு மேந்திழையே. (௩௱௮௰௨)

விளவாய்வருமிகல் கன்றுலெறிந்துமுன் வென்றுவந்த
தளவாயரசர் பிரான்ரகுநாதன் றட்வரைவாய்க்
குளவாய்தனிலுங்கள் விற்குளச்சேல்கள் குதிக்குமென்றே
களவாய்மறைத்துவைத் தீர்மட்வீரிரு கைப்பிடித்தே. (௩௱௮௰௩)

கோவைத்துறைக்குப் பதினுபிரம்பொன் கொடுத்திசைகொ
டேவைத்துறைக்குத் துரைரகுநாதன் றிகிரிமின்னே
யேவைத்துறைக்குள் வெறிகொண்டுசெங்கிலி யேந்துமத
மாவைத்துறைக்கு வெளியேவிடிற்பழி வந்திடுமே. (௩௱௮௰௪)

கடைமுன்னர்நின்று முடிமேற்றமதிரு கைகுவித்துப்
படைமன்னர்போற்றும் ரகுநாதசேது பதிவரைவா
யிடைதான்குறைந்தது மச்சமுங்காட்டுவ தில்லையென்றுன்
மடவீருமது தனத்தையெவ்வாறு மதிப்பதுவே. (௩௱௮௰௫)

அமரர்மனிதர் நரரமுதாசந ராகவுக்கிர
சமர்செய்செயரகு நாதன்சிலோச்சயத் தையனல்லிர்
நமனையடக்கிக் கட்வூருங்காட்டிய ஞாயத்தினு
லுமையிவ்வுலகி லமுதகடேசரென்றேதுவரோ. (௩௱௮௰௬)

ஈரஞ்சுகண்ட னிறக்கவிண்ணோர்குடி யேறமகி
பாரஞ்சுமக்கும் ரகுநாதசேது பதிவரைவாய்
வீரஞ்சுதாரிப்ப தின்றிமுன்கேடகம் விட்டெறிந்து
போரஞ்சுவாரிற்கை வாளையொளிப்பதென் பூங்கொடியே. (௩௱௮௰௭)

சென்றத்தைக்கண்டகப் போரிற்றினந்தள்ளிச் செய்யமர்நா
ணின்றத்தைக்கண்ட ரகுநாதன்மால்வரை நேரிழையி
ரொன்றத்தைக்கண்டிருக் கச்சூர்செங்கற்பட் டுயர்ந்தசமுக்
குன்றத்தைக்கண்டனன் காண்பதெப்போதினிக் கோவளமே. (௩௱௮௰௮)

செல்லூரப்பார்த்திட ராகுமொன்னூருயிர் தின்னநமன்
பல்லூரப்பாற்கொல் ரகுநாதசேது பதிவரையி
ரல்லூரைப்பாற்பொன் னனையிரிப்போதுங்க ளத்திப்பட்டு
வல்லூரைப்பார்த்தனன் பார்ப்பேனினிநெய்தல் வாயலையே. (௩௱௮௰௯)

செல்லக்கைம்மாறு படையார்க்குதவுமை சேரலரை
வெல்லக்கைபோயவை டுவல்ரகுநாதன் விலங்கற்பொன்னே
நல்லக்கைவைத்தப் படியெய்துமீளுவ னுனுமது
பல்லக்கைக்காட்டி யனுப்புமெனைவெளிப் பாசறைக்கே. (௩௱௯௰)

கோசிகமத்த மணிசூறையிட்டெட்டிர் கூடலர்தம்
பாசறையிட்ட ரகுநாதசேது பதிவரைவா

யாசிரியத்தின்முன் கூவிளங்காட்டி யருளியநீர்
மாசில்கருவிள முங்காட்டிற்காரிகை வாசிப்பனே. (௱௯௧)

கார்நிரையத்தைத் துரத்தியெடுத்ததன் கைவரையாற்
பார்நிரைகாத்த ரகுநாதசேது பதிவரைவாய்
நேர்நேர்நிரைநேர் நிரைநிரைமூன்றையு நீக்கிப்பின்னு
நேர்நிரையொன்றையுக் காட்டியவாறென்ன நேரிழையே. (௱௯௨)

வல்லியத்தானையி லொன்னலர்கெட்டுப்பின் வாங்கவடு
பல்லியத்தானை ரகுநாதசேது பதிவரைவாய்ச்
சொல்லியத்தானை யழைக்குமுன்மாமி தொட்ருதல்போ
லெல்லியத்தானை யசையாமலேதுக் கெறிகயிறே. (௱௯௩)

சித்தியைக்கண்டமொன் பானிற்செய்வோருநற் சேதுவிற்செய்
பத்தியைக்கண்ட ரகுநாதசேது பதிவரைவாய்
நத்தியைக்கண்ட மணிகோகனகம்பொன் னுடுமணி
யத்தியைக்கண்டன மாவுங்கண்டாலரி யாகுவமே. (௱௯௪)

முத்தமரகத மாணிக்கஞ்சொன்ன முடிநிருபர்
நித்தமெதிர்பெய் ரகுநாதன்மால்வரை நேரிழையீ
ருத்தமராயினர் சாணார்சண்டாள ருயர்மகுட
வத்தனர்தாழ்ந்தனர் பாருங்கலியுக வஞ்சனையே. (௱௯௫)

காலாலுலகை யளவிட்டமாலெனக் கைவளர்செங்
கோலாலளவிட்ட மால்ரகுநாதன் குவட்டனமே
மேலாம்வருணத்தர் மாலைமுன்காட்டி விதிப்படிப்பின்
னுலாம்வருணத்தர் மாலையுங்காட்டுத னல்வழககே. (௱௯௬)

திக்கசமாமை மகமேனத்திரி சேடன்மகிழ்
மிக்கவளர்புகழ் வேள்ரகுநாதன்மை வெற்பணங்கே
கைக்களச்சாதிநன் னெய்தலைக்கொண்டது கண்டிடையர்
தக்கதென்றக்கண மேபாற்குடங்களைத் தாங்கினரே. (௱௯௭)

வென்றேந்தினமிக லென்றிறுமார்ந்தமர் வேந்தர்நிரு
பன்றேந்திகழ்மெய் ரகுநாதசேது பதிவரைவாய்
வன்றேந்திசையிசை யுஞ்சொனல்லீரண்டர் வாழ்த்தவுயர்
குன்றேந்திமாலென மேலொளித்திருயர் கோக்களையே. (௱௯௮)

வனசம்பழனம் வளர்செம்பிநாட்டன் மலிசெல்வத்துட்
பனசம்பழனம் ரகுநாதசேது பதிவரைவாய்க்
கனசம்பழனம் புயர்கோப்பொருளிடங் கண்டுகொண்டோ
மனசம்பழனம் பனதாளிட்டு மறிவதென்றே. (௱௯௯)

சொற்புதனுங்கல்வி யிலென்றநுதினந் தோறுமன்னி
யற்புதமன்னர் பணிரகுநாத னணிவரைவாய்க்
கற்புதருநகை யீர்நிலையாமைமுன் காட்டவந்த
புற்புதநிற்க நிலையாமுந்நீரெங்குப் போகியதே. (௨௱)

சேதுவையாளலர் மாதிருநால்வளர் சேதுவையாண்
மாதளவாய்ரகு நாதகிரீடி வரைவருமுற்
பாதமின்னேதண் டுலம்வாங்கச்சொற்சுயம் பாகியென்றே
யோதனங்காட்டிய நீகழுநீரை யொளித்ததென்னே. (உ௱௩)

நாகராமுந்து தமிழோரின்மைக்கங்கு னேயச்செய்தி
வாகரமைந்து மிகுரகுநாதன் வரைமினன்னீர்
சாகரமுந்தி யடைத்திரிலங்கைமன் சந்தமணிச்
சேகரமுந்தகர்த் தாலுமையோவி சேயென்பரோ. (உ௱௪)

மானில்மெங்குமங் தாநிலத்தங்க மகிழ்செம்பியர்
கோனிலம்பாட்டைத் தெறுரகுநாதன் குவட்டணங்கே
கானிலங்கார்கடீ லூர்கண்டநாமக் கலையர்கண்டாற்
றேனிலங்கார்திருத் தொண்டத்தொகையுந் தெரிந்தவரோ. (உ௱௫)

ஆவசியம்பொன்னே யூர்வசியூர்ப்பெய ரார்க்கருளிப்
பாவசியங்கொள் ரகுநாதசேது பதிவரைவாய்ப்
பூவசியஞ்செய் தனவசியந்தரப் பூண்டதுபோம்
கோவசியந்தரப் பூண்பதெப்போது சொற்கோகிலமே. (உ௱௬)

பிங்களத்தால்வந்த தேர்குடும்பப்பிர திட்டைசெய்யக்
கங்கணங்கட்டு செங்கைரகுநாதன் கவின்வரைவாய்
ம[illegible]கைநல்லிருங்கள் ரத்தினநாகரத்தை மறைத்துவரச்
சங்கடங்காட்டத் தகுமோவிரப்பவர் தங்களுக்கே. (உ௱௭)

தோமினியார்செயி னுஞ்சிரஞ்சேதிக்கத் தோன்றுமுனே
மாமினினீள்வடி வாள்ரகுநாதன் வரைமட்வீர்
தேமினிதாமெய் யமலேயைப்போற்றித் திவாமுன்முறை
யாமினியேவன நீலியைப்போற்றுதும் யாமினியே. (உ௱௮)

மகமுலேமேவ வளர்செம்பிநாட்டிறை வாகுவென்று
நகமிலேவீர ரணகேசரிரகு நாதன்வெற்பிற்
சகமிலேயஞ்செய மேலாயுயர்ந்த தனம்படைத்தா
சுகமிலேயென்று சொல்வாரோவுலகிற் சுடர்த்தொடியே. (உ௱௯)

வேற்சேரலர்மச்சர் கொங்கர்வங்காளர் விறற்சமுகப்
பாற்சேரபய ரகுநாதசேது பதிவரைவாய்
நூற்சேரவையினு நூற்றிலொன்றுன நுசுப்புடையீர்
காற்சேரளித்தரைக் காற்சேர்கொடாதது கைதவமே. (உ௱௰)

குலத்தைத்தந்தேவர் கொளச்செம்பிநாட்டுக் குடிகளுக்கு
நலத்தைத்தந்தாளு மனுரகுநாதன் மைந்நாகத்திற்சை
வலத்தைத்தந்தார்குழ லீர்முன்பதக்க வலதென்றுள்ள
கலத்தைத்தந்நீரிரு தூணியுந்தாருங் கணக்குடனே. (உ௱௰௧)

கருக்குஞ்சிலிமுக மன்சொலிநட்பைமுன் காத்திகலே
நருக்குஞ்சிலிமுக மன்னப்பொருரகு நாதன்வெற்பிற்

பருக்குஞ்சிலீமுகங் காட்டியநீமறை பாணிக்குளே
யிருக்குஞ்சிலீமுகங் காட்டாதிருப்பதென் னேந்திழையே. (௨௱௰)

வேந்தாதிவேந்தர் பரவுஞ்சமூக விசயன்மனு
மாந்தாதிகள்புகழ் வேள்ரகுநாதன் வரைமடவீர்
காந்தாரியாய்த்துரி யோதனமால்பெற்றுக் காட்டியவற்
காந்தாதையைமுன்ன மேகாட்டியதிங் கதிசயமே. (௨௱௰௧)

முன்னாரியைச்சிலை யாகச்செய்தோன்வெட்க முன்சிலையைப்
பின்னாரியாகச் செயும்ரகுநாதப் பிரபலன்வரைப்
பொன்னேதினநற் கரும்பைத்தராமற் புழுகிலகு
பன்னாடைமூடு குரும்பைதந்தாயென்ன பாக்கியமே. (௨௱௰௨)

வஞ்சனையாக வருங்கொடியோர்கண் மணியிழக்க
வெஞ்சரமேவு செயரகுநாதன் வியன்சிலம்பிற்
கஞ்சமலர்மனை விட்டுமுன்னான கனியளிய
நஞ்சதிட்டாமற்செந் தேங்காயையேதுக்கு நல்கியதே. (௨௱௰௩)

சூரதத்தில்வேள்கல்வி யிற்போசன்றந்திற் றுவரையர்கோன்
சரதத்தில்ராம னெனும்ரகுநாதன் சயிலமின்னே
பரதத்திலாவ தறிந்தோஞ்சிவநிசிப் பத்தர்புரி
விரதத்திலாவது நீயேயறிவிக்க வேண்டியதே. (௨௱௰௪)

கலையைமுன்காட்டு மதுபோற்றவளக் கவிகைநிழ
னிலையைமுன்காட்டும் ரகுநாதன்மால்வரை நேரிழையீர்
மலையைமுன்காட்டி யடைத்தீர்கடலைநன் மந்திரத்தா
லலையைமுன்காட்டி யதுபோலக்காட்டு மனையின்றியே. (௨௱௰௫)

தங்காவியன்ன நிறைசெம்பிநாட்டன் சரணடைந்தோர்
பங்காவியன்ன ரகுநாதசேது பதிவிருதாஞ்
செங்காவியன்ன மணிதானைசேர்கசச் சேவகமுன்
கொங்காவியன்ன குழலீரதுவுங் கொடிக்கினன்றே. (௨௱௰௬)

கிடைக்குங்கிடைக்குங் கிளர்செம்பிநாட்டன் கெடிப்பயந்தன்
படைக்கும்படைக்கும் ரகுநாதசேது பதிவரையீர்
புடைக்கும்புடைக்குந் துரைத்தனநீர்தரப் பூரித்தநான்
கடைக்குங்கடைக்கு மமைச்சரையுந்தரிற் கைக்கொள்வனே. (௨௱௰௭)

ஞானந்தந்தீர மலிநதிச்செம்பியர் தோன்றலிசைக்
கானந்தந்தீரஞ் செவிரகுநாதன் கவின்வரைவாய்
வானந்தந்தீரொன நுண்ணிடையீர்நன் மணிக்கனக
தானந்தந்தீரினங் கோதானமுந்தரிற் ஞானமெய்யே. (௨௱௰௮

பொன்னிக்குப்பொன்னித் திலமணியீதண் புனற்செம்பியாள்
சென்னிக்குச்சென்னி யெனும்ரகுநாதனற் றேவையன்னீர்
வன்னிக்குமுன்றன மீந்தீர்சொற்காவியம் வாசிக்கநீ
றுன்னிக்கவிஞ ரெனக்காட்டிற்கூட்டிற் குடையவரோ. (௨௱௰௯)

நட்டமுந்திசையெனப் பொற்சதங்கைத்தொனி நல்கமுன்ச
கட்டமுந்துபங்கசத் தான்ரகுநாதன் கவின்வரைவாய்
வட்டமொழிதென்மொழி யாஞ்சூதமாமுன்பின் மார்க்கப்படித்
திட்டமுன்புகண்டனம் பின்னென்றுங்காணட்டுஞ் சேயிழையே. (உ௱உ0)

கித்தியமாண்மை யவுதாரியநன்மை கீர்த்தியைந்து
நித்தியமாகும் ரகுநாதன்மால்வரை நேரிழையீர்
சத்தியமில்லை யளியில்லைமெய்யுண்மை சாட்சியில்லை
யத்தியும்வம்பு முடையீருமக்கிங் கரசில்லையே. (உஉக)

கொடைக்கஞ்சியமுகி லார்பொழிற் செம்பியர்கோமதலைத்
தொடைக்கஞ்சியமெய் ரகுநாதன்மால்வரைத் தோகையுன்ற
னடைக்கஞ்சியபிடிக் குத்துணைப்பார்த்தன நாட்டுமே
லிடைக்கஞ்சியதுடி கட்டுண்டடிபட் டிருப்பதுமே. (உஉஉ)

சத்துருமித்துரு வித்துருமம்பொற் றரளமிட்டு
நத்துருநத்துரு வத்துருவன்ரகு நாதன்வெற்பின்
மத்துருவைத்தரி சித்தோமுன்னூழி மதித்தவன்செய்
பத்துருவத்திலொன் றெப்போதுகாண்பது பைந்தொடியே. (உஉங)

மன்னுமரக்கனை முன்னாளப்போரின் மருட்டபங்கந்
தன்னுண்மையாறசெய்த மால்ரகுநாதன் சயிலமின்னே
கொன்னார்கலிங்க வங்கம்மலையாளக் குடகுதந்தாய்
பின்னுடணிமச்ச தேசமுமீயிற் பெருமையுண்டே. (உஉச)

கலமலிவேலை யலையலைவீறு சங்கத்துறைசேர்
தலமிகுதேவைத் துறைரகுநாத தனதன்வெற்பி
னலவனசத்திரு வன்னீருமமாலிங்கு நாடொறுமுற்
பலமிலைமெத்த சலமுண்டிதென்ன சம்பாவனையே. (உஉரு)

நரியாடுமான்முச லான்போற்பகையஞ்ச நாடுகுய
வரியாடவர்திலகன்ரகுநாதன் வரையணங்கே
யரியாடுகூத்துமுன காட்டியநீயினி யம்புலிச்சோ
த்ரியாடுகூத்தையுங் காட்டிலுண்டாம்வெகு தன்மங்களே. (உஉசு)

ஓதண்டர்நாட்டிற் குடிவாங்கப்பந்த ரொடுமெணக்கான்
மீதண்டநாட்டப் புரிரகுநாதனல் வெற்பணங்கே
கோதண்டக்குந்தமுன் னீந்துபின் மாமகுட்டமுக்கட்
வேதண்டமுந்தரி னனங்கதேசத்தை வெல்குவனே. (உஉஎ)

மாதண்டகாரண்ணிய வாசிகண்முன்னிகல் வாய்க்கிலென்வில்
காதண்டுமென்றருள் செய்ரகுநாதன் கவின்வரைவாய்க்
கோதண்டக்குந்தக மின்மைமெய்யாகிற் குடமலைத
லேதண்டராகவ மோதலங்கார விளங்கொடியே. (உஉஅ)

புட்விகடந்தர் மிளவற்குமெய்த்தவம் பூண்டுமுன்னே
யடவிகடந்த பதரகுநாத னசலமின்னே

குட்விகட்ந்தரல் காட்டிக்கலைப்பக் கைக்கொண்டொளித்த
கட்விகட்ந்தர லாலுனேயுஞ்சொல்வர் கண்ணனென்றே. (உ௨௯)

பூணனைதந்தை தளைநீங்கியானந்தம் பூணக்கஞ்ச
ஞணமுன்னுக வருரருநாதன்மைந் நாகமின்னே
பாணனையோடி யொளிக்கவென்ருயக் கபந்தனையுங்
காணவென்ருலுனே யேதிருமாலென்பர் கண்டவரோ. (உ௩௰)

செற்கோலவெம் பகுவாய்த்தாடகை புத்திரர்களிரா
மற்கோலுதவு தனுரகுநாதன் வரைமடவீர்
சொற்கோலி லம்பையங்கோட்டேர்தற்கோலந் தொழுதந்திரு
விற்கோலமுந் திருவேற்காடுமேற்றெழு வேண்டியதே. (உ௩௧)

குருவார்த்தைமேற்கொண் டட்ர்பிசிதாசநர் கோளேவென்று
பெருமகங்காத்த துரைரகுநாதன் பிறங்கன்மின்னே
திருநீலகண்டரை வன்னத்துட்ன்முன் றிலேயிற்கண்டோம்
கரைதிருக்காளத்தி வேடரைப்போரோடுங் காண்குதுமே. (உ௩௨)

வீட்ணனுற்சொ லிலங்கைச்சுவேலைக்கும் வேலைக்குமேன்
மாட்ணைசெய்யச் செயும்ரகுநாதன் வரைமடவீர்
கூட்லிறைரத்தி னம்பகர்ந்தாம குட்ஞ்செய்வினை
யாட்ல்கண்டோம் வலைவீசாடலுங்கண் டிருகுவமே. (உ௩௩)

தருவானகந்தொடு செம்பியிற்றேவைத் தலத்தளவா
யுருவாகியமனு வாம்ரகுநாதன்வெற் பொண்டொடியீர்
திருவானைக்காவுஞ் சிரகிரியுந்தெரி சித்துவநதோங்
கருவூர்திரியம் பகம்விருப்பாட்சியுங் காண்குதுமே. (உ௩௪)

காராநிதிதரு சிந்தாமணிசுவர்க் கத்துட்னிப்
பாராளுமிந்திர ரகுநாதசேது பதிவரைவாய்
வாரானையம்புலி ஞங்கஞ்சப்பாணி மணிவட்முந்
நீராட்ல்காப்புறு வோஞ்சொற்செய்வீரையெந் நேரிழையே. (உ௩௫)

கங்கையிலேவிடு மோட்த்லேவன் களித்துத்தொழ
நங்களுக்கோர்துணை நீயென்ரருள்ரகு நாதன்வரை
மங்கைநல்லீர்தமை யன்றம்பியாமுநற மார்க்கப்படி
யங்குசம்போற் றரிசிக்கட்டுநாம வரயிலேயே. (உ௩௬)

துரந்தரராச புரந்தரனுன துரையுலகு
புரந்தவைபோக ரகுநாதன்மால்வரைப் பொன்னனையீர்
கரந்தொழுவேங்கடங் காட்டியநீரினங் காட்டுமெணி
யரங்கனையாழி தரனேமுகுந்தனை யப்பனையே. (உ௩௭)

கனமானநீர்யெள வனமோகையீகைபொன் கல்விமெய்விற்
பனமாண்மைமீறு ரகுநாதசேது பதிவரைவாய்த்
தனரோகைகாட்டிமெய் லட்சணமுஞ்சொன்ன சாத்திரமெய்
யினமாநன்யச்சமுங் காட்டியுரைக்கி லிளங்கொடியே. (உ௩௮)

வெப்பளித்தாவ முறைபுங்கமெய்திகல் வேட்டிரத்தங்
கொப்பளித்தாகவஞ் செய்ரகுநாத குபேரன்வரை
யொப்பளித்தாவதில லாவஞ்சனமணி யுண்மையிலாச்
செப்பளித்தாவதெ னப்பிரயோசனந் தேமொழியே. (உ௩௯)

காலையிலாமலெக் காலையிலுஞ்செய் கடுங்கொலைவை
வேலையிலார்தரு கோரகுநாதன் வியன்சிலம்பி
னூலையிலாமற் செயுமிடையீர்முன்பு நூதனமாஞ்
சேலையிலாமற் றருவதுண்டோமவ்வுஞ் சீதனமே. (உ௪0)

நாலாம்பனுவ லவரசச்சொற்றமிழ் நாவலர்க்கு
மேலாம்பரிசருண் மாலரகுநாத விதுரன்வெற்பிற்
பாலாஞ்சுயோதன மாருதிசசண்டைமுன் பாக்கநடு
நீலாம்பரனில்லை யேயுரைப்பாரெவர் நேரிழையே. (உ௪௧)

சேலனமேதி சொரிசுதையுண்பணைச் செம்பியன்செஞ்
சோலனபாயன் ரகுநாதன்மால்வரை கொண்டவவாப்
பாலனமென்மொழி யீர்முன்குசனைப் பணிந்ததுபோ
னீலனையுந்தொழு தாலெய்தலாஞ்செல்வ நேத்தியதே. (உ௪௨)

தம்பதமாதி யிறக்கநம்பாத தரியலர்க
ணம்பதசேட ரதிராகச்செய்ரகு நாதன்வெற்பிற்
கம்பதனமிடற் றீர்முனமாலெனக் காட்டியிகற்
...பதனங்கண் டொளிப்பதென்னுந்தகங் கோவலரே (உ௪௩)

வந்தனமாகத் தொழுவார்க்குமந்திரம் வாய்த்ததிக்கு
பந்தனமாகும் ரகுநாதசேது பதிவரைவா
யிநதனவத்திரத் தீர்கலியாண மிசையிலிங்கு
சந்தனமுன்கொடுத் தீர்கொடுப்பீரட் சதையினியே. (உ௪௪)

துருப்பதனைக்கொணர்ந் தன்றெதிர்விட்டுத் துரோணனொடுங்
குருப்பதமேத்து மனுரகுநாத குமுணன்வெற்பிற்
கருப்பதனல்லுரு வீர்முதனுமலல் காரச்சுனமாம்
பருப்பதமேத்தின மாடுதுமேற்றுங்க பத்திரியே. (உ௪௫)

மித்திரபுத்திர னிகைக்குவாகைக்கு மேவுபல
பத்திரனன்ன ரகுநாதசேது பதிவரைவாய்ச்
சித்திரமென்மொழி யீர்காமக்கோடை தெறவெயிற்குச்
சத்திரமுன்கொடும் பின்கொடுநீர்க்குடந் தாகத்திற்கே. (உ௪௬)

தடமிருந்தென்ன வனஞ்சூழ்தென்றேவைத் தனிலெண்டிரு
நடமிருநதென்ன முரசொல்செய்ரகு நாதன்வெற்பிற்
படமிருந்தென்ன வரையீர்மருநதுடன் பண்டிதவா
கடமிருந்தென்னமுன் சத்திரமிட்டபின் காண்குவமே. (உ௪௭)

அயனங்களித்த விருந்திணைநாற்கதி யாமுயிர்க்கெண்
பயனங்களித்த ரகுநாதசேது பதிவரைவாய்க்

கயனங்களூர்நந் தனமென்றுரைத்தென்ன காட்டியென்ன
நயனங்களூர்க்களித் தாம்பயிர்செய்குவ நன்னுதலே. (உசஅ)

உடலையுடலை யுளமாதவரி னுறுநரொடு
நடலைநடலை யிலாமற்புரிரகு நாதன்வெற்பின்
மடலைமடலை வசியர்க்குஞ்செய்யு மடவரலே
விடலைவிடலை யிலாத்தனமேது வெளிப்பட்டதே. (உசகூ)

சித்திரைபாவணி முன்போனடுங்கச் செறுநர்வெலும்
பத்திரையன்ன ரகுநாதசேது பதிவரைவா
யுத்திரையன்ன மடவீர்பணப்பை யுடையர்வைச்ச
முத்திரையிலலை யெனிலாந்தனத்துக்கு மோசங்களே (உ௫0)

அடலையுடைய கிட்கிந்தையர்கோனை யடித்தரச
விடலையெனுமெய ரகுநாதன்மால்வரை மெல்லியலா
யிடலைவிடுமணிக் குந்தனமேனெளி யேங்களுக்குக்
கடலையவலுட னீந்தாலுண்போம்பலன் கைகண்டதே. (உ௫க)

அருணனையுந் மணியெயிற்றேவைக் கரசன்கொடை
தருணனையாதருண் மால்ரகுநாதன் சயிலமன்னீர்
வருணனைமுன்பு கடிந்தீரணிபணி வார்மொய்க்கும்ப
கருணனையுந்தெறி னீர்நிசங்கோதண்டங் கைக்கொண்டதே. (உ௫உ)

முல்லையலங்கலின் மின்னூர்கண்வண்டின மொய்க்கவவாச்
செல்லுமிவுளித் துரைரகுநாதன் சிலம்பனையீர்
கொல்லமுன்னாகக் குயவரிவந்து குதிக்கக்கண்டும்
பல்லைப்பமெங்கொளித் திருங்களசேவகம் பாழ்த்ததுவே. (உ௫௩)

நிற்கடங்காக்கொடி யாலவட்டம்படை நேரலர்கோ
விற்கடங்காண தெறுரகுநாதனல் வெற்பனையீர்
சொற்கடங்காத புகழ்முகராமனிற் றோன்றியநீர்
மற்கடங்காண்பித்துத் தாவாமுன்வேலை மறைத்ததென்னே. (உ௫௪)

மூனம்படைத்தீர ரெனவந்தநேரலர் மூட்டைப்போல்
வனம்படைத்தோட விடுரகுநாதன் வரைமடவீர்
தனம்படைத்தீரிரண் டேர்படைத்தீரொன்ன தாடசியுண்ணா
வனம்படைத்தீரில்லை சத்திரமேதுக் கடைத்ததுவே. (உ௫௫)

கொள்ளமறையவர்க் கெண்ணிருதானங் கொடுத்தமைச்சர்
விள்ளமறைகொளு ளரகுநாதன் வியன்சிலம்பிற்
புள்ளுமறையி தெனுங்குழலீர்முன் புகல்கணக்கு
வெள்ளமறைய வுடனேபதுமம வெளிப்பட்டதே. (உ௫௬)

குத்திபல்லாரி புறுடில்லியுச்சினி கோலகொண்டை
சித்திரக்கன்முதல் வெல்ரகுநாதன் சிலோச்சயவா
யத்திரியைத்தரி சித்தோஞ்சரபங்க ளுச்சிரமச்
சித்திபெற்றுளினி நாமேயிராமனுஞ் சீதையுமே. (உ௫௭)

கதக்குஞ்சரக்க ரினத்தைச்சினத்துக் கடித்துணைவாய்
குதக்குஞ்சரக் குமுணன்ரகுநாதன் குலவரைவாய்
மதக்குஞ்சரக் குழலீர்தனபார மதிப்பறிந்தோ
மிதிக்குஞ்சரக்குப்பை காட்டிமுன்கொண்ட விலைசொல்லுமே. ௨௫௮

இடக்குமுறைசெய் கொடுங்கோலரச ரினத்தைவெட்டி
யடக்குமுறைவடி வாள்ரகுநாத னணிவரைவாய்க்
குடக்குவடக்கறிந் தோமதன்விற்குணக் குத்தக்கண
நடக்குமிடமினி யாமறியோமிங்ங னன்னுதலே. (௨௫௯)

திசையம்படிக்க வளர்செம்பிநாடன்மெய்த் தேவையர்கோ
னசையம்படிக்க வரும்ரகுநாதனன் னாட்டிலுயர்ந்
தசையம்படிக்கவுங் காவேரிகாணவுந் தந்தவுங்கள்
விசையம்படிக்க விடுங்கல்வினுன்கொள்ள மெல்லியரே. (௨௬௰)

போரணவாசி நடத்தியமாத்தினா புத்திரன்மெய்
யோரணவாசி முனைரகுநாதன்வெற் பொண்டொடியீர்
வாரணவாசிமுன் கண்டுவந்தோநல்ல வாரிதிசேர்
காரணவாசி மணிகோகனமென்று காண்பதுவே. (௨௬௧)

படியிட்டமாகப் புரந்தடங்காத பகையைவென்ற
வடியிட்டவேற்கை ரகுநாததீரன் மணிவரைவாய்த்
தொடியிட்டசெங்கை யிளம்பிடிநீநயந் தோன்றவுடம்
பிடியிட்டபோதல்லவோ நிசமாமுன் பிடியிட்டதே. (௨௬௨)

குனிக்குமுன்னேசிலை யொன்னலர்வாய்ச்சொல் குளறவுமெய்
பணிக்கும்வென்கண்ட ரகுநாதசேது பதிவரைவாய்ச்
சனிக்குமுன்னேதிரு வாரூர்க்கமலத் தடத்தைக்கண்டோ
மினிக்கண்டுபோற்றுது மம்பலவாணன்மன் றேந்திழையே. (௨௬௩)

துணிவார்க்குமாபலி பாற்றானமேற்றிடத் தோயத்தைமுன்
னணிவார்க்குமாபுரி தேவைத்துறைரகு நாதன்வெற்பிற்
பணிவார்க்குச்சொர்க்க மளித்தாயினியப் பரமபதந்
தணிவார்க்குநீதரி லுண்டாமகிமை தளிரியலே. (௨௬௪)

சுகராலயத்தை யற்றோர்பணிதேவை தொழுமன்னர்சூழ்
நகராலயத்தை ரகுநாதனைகமுன் னாட்டந்தந்தே
சிகராலயத்தைமுன் காணப்பெற்றோம்வசு தேவர்தந்த
மகராலயத்தையுங் காணிலுண்டாங்கதி வாணுதலே. (௨௬௫)

ஓகையையூகை யுடனேகொண்டாதுலர்க் கோய்வதின்றி
யீகையையீகை புரிரகுநாதன்வெற் பேந்திழையீர்
வாகையைக்காட்டி யதுபோலிப்போதுங்கண் மன்னவன்ப
தாகையைக்காண்பிக்கி னீரோபவர்க்குத் தளகர்த்தரோ. (௨௬௬)

நூதனமாகத் தருவிற்கனகநன் னூற்கவிக்குச்
சீதனமாகத் தருரகுநாதனற் றேவையன்னீர்

மாதனைநாகமுன் கானவென்றுக்கிர வழுதியைப்போற்
கேதனங்காட்டப் பயந்தாலுமக்கப கீர்த்திகளே. (உசுஎ)

நெருப்புஞ் சதாகதியுங்கலந்தா லெனநேரலர்மேற்
றிருப்புஞ்சமர்வடி வேலரகுநாதனற் றேவையன்னீர்
கருப்புக்கலசமு மையம்புகலுநல் காதுநற்பால்
பருப்புந்தனம்பணி யாரமளித்ததென் பாக்கியமே. (உசுஅ)

காலேத்தந்தத்தியை யாறிடுமாப்படைக் காவலன்செங்
கோலேத்தந்தத்தியைச் செய்ரகுநாத குமுணன்வரைப்
பாலேத்தந்தத்தியை வாய்மடவீர்முன் பரமனைப்போற்
றோலேத்தந்தத்தியை யெங்கொளித்தீர்தரிற் றோற்றுவனே. (உசுகூ)

மாட்டாங்குளப்படி போலொன்னலர்படை வாரிகடந்
தீட்டாங்குளத்தி னிதிரகுநாதன்வெற் பேந்திழையீர்
நாட்டாங்குள மலையாங்குளங்கண்டன நாமினிமேற்
காட்டாங்குளத்தையுங் காண்பதெப்போது கழறுகவே. (உஎ0)

அடம்பிடிக்கைதை வளர்செம்பிநாட்டி லரசுநன்மை
யிடம்பிடிக்கைதரச் செய்ரகுநாதன்வெற் பேந்திழையீர்
கடம்பிடிக்கைதை வருமுங்களூர்ப்புயிர் காணக்குடி
யுடம்பிடிக்கைதரு முன்வாரகாதந்த துத்தமமே. (உஎக)

தடம்பணிலஞ்செறி யுஞ்செம்பிநாட்டிற் றரியலருய்
யிடம்பணிகேட்டுத் தொழுரகுநாதன்மெய் யேமவெற்பிற்
கடம்பணியாங்கு குடமுன்கண்டோமயில் காணிலன்றோ
திடம்பணிவோமயில வாகனனென்றுனைத் தேமொழியே. (உஎஉ)

ஊனைமுன்காட்டுப் பிறவினுக்காக வுதவுமனுக்
கோனைமுன்காட்டத் தகுரகுநாத குபேரன்வரை
யானையின்மேல்வைத் துக் கோலமுன்காட்டி யருளிவட
மீனையுங்காட்டிலன் றோகலியாணமெய் மெல்லியலே. (உஎங)

காலார்கலிப்புடை யேலாருயிர்கொ ணமனெனவே
வேலார்கரதல மால்ரகுநாதன் விலங்கன்மின்னே
மாலார்திருக்கச்சி யத்திகிரிகண்டு வாழ்ந்தவனாம்
பாலாறுசேர்திருப் பாற்கடல்கண்டு பணிதனன்றே. (உஎச)

வெருவிடங்கைக்கோ லலட்சியமாகக்கை வேல்கொண்டிக
லொருவிடங்கைக்கப் பொருரகுநாதன்வெற் பொண்டொடியீர்
மருவிடங்கைப்பணி யீர்திருநீர்மலை மாலைக்கண்டோர்
திருவிடங்கைக்கு மயிலைக்கும்போவர் தெரிசிக்கவே. (உஎரு)

தரைக்குத்தனியென வாழ்செம்பித்தேவைத் தலத்தர்மகிழ்
துரைக்குத்துரைரகு நாதன்சிலோச்சயத் தோகையன்னீர்
வரைக்குவரையுள தென்றுமுன்காட்டி வரினுமவை
திரைக்குத்திரையிடு வாரோவுலகிற் றெரிந்தவரே. (உஎசு)

மஞ்சளையிஞ்சி தளிவளர்செய்யொடு மஞ்சளிஞ்சி
விஞ்சிமெய்த்தேவைத் துரைரகுநாதன் விலங்கன்மின்னே
றுஞ்சுமுனேமுசு குந்தனிலாமற் றுரத்தியநீ
கஞ்சனையுந்தொலைத் தாற்றெழுவாருனைக் கண்ணனென்றே. (உஎஎ)

கேட்டந்தமன்ன ரிசைவீரமாண்மை கிளர்புகழ்பூண்
சூட்டந்தமாமெய் ரகுநாதன்றேவைச் சுடர்க்கிரிவாய்க்
காட்டந்தமாஞ்சொற் கடைமருந்திர்பெருங் காயமென்று
கோட்டந்தந்தீர்கடுக் காய்ப்பூவுநீர்தரக் கோருவனே. (உஎஅ)

குச்சிலையெய்தப் பெறுதவரோனுந்தற் கோரிவந்தான்
மச்சிலையெய்தச் செயும்ரகுநாதன் வரைமடவீர்
நச்சிலையென்ப தறிந்தோநும்பாலினி நாங்களுய்யக்
தச்சிலையென்பதுஞ் செய்தால்வெகுநன்மை காணுமக்கே. (உஎகூ)

அஞ்சையிலே வெருவேலென்றெளியரை யாதரிக்கு
மஞ்சையிலேசெனச் செய்ரகுநாத மகிபன்வரைப்
புஞ்சையிலேது வரையென்றுகாட்டி யிப்போதழகா
நஞ்சையிலேயென லாமோபெண்ணேபொன்னி நாட்டினிலே. உஅ0

சந்தனுபோச னளன்மாதவனரிச் சந்திரன்போல்
வந்தனுமான மறுரகுநாதன் வரைமடவீ
ரெந்தனுவெய்த மறிமாவிரண்ட திலக்குத்தப்பி
வந்ததிலொன்றை மறைத்தொன்றைக்காட்டினன் மார்க்கமன்றே. ()

தாகமிருந்த வறியோர்க்கமுதந் தருதலிற்றி
யாகமிருந்த கரரகுநாத னணிவரைவாய்
மாகமிருந்த நடுவீர்துரோணர் வருபதும
யூகமிருந்துஞ் சயினியமோடி யொளித்ததென்னே. (உஅஉ)

வீரரண்போர்க்கு வெருவிமுன்சந்தி விடினுமொப்பாத்
தீரரணமத மாரகுநாதன் சிலம்பனையீர்
நீரரண்கைக்கொண்டு வெற்பரணத்தள்ள னீதியன்று
பாரரணம்மிலை யுங்களரமனைப் பாழென்பரே. (உஅ௩)

வாட்டானைகொண்ட கடற்றுனைமுண்ட வருமகத
நாட்டானைவென்ற செயரகுநாத நரேந்திரன்வரைக்
காட்டானைவென்ற கட்டீர்கிள்ளையேந்திமுன் காணுமயிற்
கோட்டானைவென்ற கரும்பிளையாதுரங் கோகிலமே. (உஅச)

கூட்டிடநட்பைப் பிரிக்கப்பிரித்ததைக் கூட்டிப்பின்னு
மீட்டிடச்செய்தந் திரரகுநாதன் விலங்கலன்னீர்
நாட்டிடைஞ்செட்டி யுரத்தைமுன்காண்பித்து நஞ்சத்தைப்பின்
காட்டிடவோமறைத் திருங்களவாணிபங் கைகண்டதே. (உஅரு)

கிள்ளைமறைசொலக் கோகிலங்கேட்டுக் கிளர்பொழில்சூழ்
வள்ளைவயற்செம்பி யாள்ரகுநாதன் வரைமடவீர்

பிள்ளைமுன்பெண்டந்த தானங்கண்டோமந்தப் பிள்ளைசைவங்
கொள்ளையிட்சசம ணேடிடட்துங்கண்டு கொள்வதென்றே. (உஅசு)

கலையிருந்தாலு முளத்திற்றருமங் கழறுமனு
நிலையிருந்தால் மகிழ்ரகுநாத நிருபன்வெற்பிற்
சிலையிருந்தாவதென் னேகட்டியப்பரைச் சேர்க்கமுன்னே
யலையிருந்தாலல்ல வோசொல்லுவாயினி யங்கனையே. (உஅஎ)

நாதகமம்பு கதையீட்டிமாரத நாகமன்செய்
சாதகமன்னு முராகுநாத தயாளன்வெற்பிற்
பேதகமின்னற் பெருந்துறைகாட்டிய பின்னலவோ
போதகங்காட்டத் தகுமடியார்கட்கும் பூங்கொடியே. (உஅஅ)

வான்சிந்திப்பூநிக ரில்லாக்கைம்மாறுடை வள்ளல்செம்பிக்
கோன்சிந்திப்பாவலர் சொல்ரகுநாதன் குவடனையீர்
தேன்சிந்திப்போமென் றளித்தீர்முன்பானையத் தேனைத்தந்தா
னுன்சிந்திப்போமென்றுந் திததிக்கக்கொண்டுங்க ளுமத்தையே. ()

கட்டணக்கோட்டை நிதியொடுமன்னர்தங் கைகுவித்துக்
கொட்டணக்கோட்டை விடுரகுநாத குபேரன்வரை
யுட்டணக்கோட்டை நிகர்களத்தீர்தரு முங்கள்பெரும் (மே
பட்டணக்கோட்டையைப் போற்சந்தைப்பேட்டையைப் பார்க்கட்டு

குஞ்சத்தைவெள்ளைக் குடையைத்தமிழ்க்குக் குலவுசப்பிர
மஞ்சத்தையீயுங் கொடைரகுநாத மகிபனல
வஞ்சத்தைவென்னடை மானேமுன்பந்தனா யாதரித்த
கஞ்சத்தைக்சேர்ந்தனன் சேர்வதெப்போதுவங் காளத்தையே (உகூக)

விண்புவிபூட்டண மாடைபொன்னுடை விபவமென்று
நண்புவிபீட்டணர் செய்ரகுநாத நரேத்திரன்வெற்பிற்
பண்புவிபூதி யனையீரிருகொங்கை பாலித்தநீ
ருண்புவிபூசனை யாற்கொள்ளுவானர் யுதவலையே. (உகூஉ)

பம்புவியாகர ணங்கலைஞானங்கொள் பண்டிதரா
னம்புவியாழ மெனும்ரகுநாதன் மைந்நாகமின்னே
கொம்புவியாசர் கதையெழுதேடு கொடுத்ததுமெய்
யம்புவியாள வரமுந்தந்தாற்கலி யாணமெய்யே. (உகூங)

உருமானையிட்டிக வேதாவிபவத் துருப்பசிக்கோ
தருமானையிட்ட விரல்ரகுநாதன் றடவரைவாய்
வருமானைமென்குழ லீர்செய்குவார்கை வரினுமெய்யாக்
கருமானையின்றி யமையாதுகாண்கும்ப காரனுக்கே. (உகூச)

கங்கையைக்கண்டவர் கங்கையைக்கண்டு கருதுமவர்
சங்கையைக்கண்டனை செய்ரகுநாதன் சயிலவரை
யிங்கையைக்கண்டு சொற்றேன்வஞ்சிகூட லிறைகொல்வஞ்சி
கொங்கையைக்கண்டனன் பாணரையுங்கண்டு கொள்ளுவனே (உகூரு)

வானங்குலவரை யெங்குந்தன்சீர்த்தி வளரவுமை
கோனங்குலப்பணி செய்ரகுநாத குமுணன்வரைத்
தானங்குலவுமி னன்னீர்முன்பெற்றவர் தங்களுக்கு
மானங்குலமெய்தப் பண்ணுமுன்னேவந்த மாதங்கமே. (௨௱௯௬)

தென்னவரைவில் லவரைமனுவிற் றிருத்தியிசை
மின்னவரைச புரிரகுநாதன் விலங்கலன்னீர்
சொன்னவரையறிந தோமுங்கள்காவியஞ்சூத்திரமா
மென்னவரைய மறையாமலீந்திடு மெங்களுக்கே. (௨௱௯௭)

திறையடிக்கும்பல தீவுங்கலிப்பகை தீரவென்று
பறையடிக்கும்பொன் ரகுநாதசேது பதிவரைவாய்க்
கறையடிக்கும்ப மூனிகாட்டக்காணுந்தொல் காப்பியத்தின்
மறையடிக்கும்பன் முடிக்குமுனையொன்று வாணுதலே. (௨௱௯௮)

சிந்துரத்தந்தள மேற்கொண்டிடப்பர சேனையைமொய்
சிந்துரத்தந்தள வேல்ரகுநாதன் சிலம்பிற்பொன்னே
சிந்துரத்தந்தச்சந் தங்கண்டனமொன்று சேரையடிச்
சிந்துரத்தந்த மிகுகீதமுங்கண்டு தேர்வதென்றே. (௨௱௯௯)

நிசிசரனன்றுமெய் யென்னும்வெங்கூற்றை நிமிடத்திற்கொல்
விசிகரமன்றொடு வேல்ரகுநாதன் வியன்சிலம்பில்
ருசிகரமென்றயின் மோகனதம்பன ரூபமின்னே
வசிகரமென்றறி விப்பாய்முன்பேதனம் வாய்த்தவர்க்கே. (௩௱)

மச்சுப்பெய்வீடுநிதியாமறையவர் வாழ்த்தவொரு
மிச்சுப்பெய்தான ரகுநாதன்மால்வரை மின்னனையீர்
கச்சுப்பயோதர வண்ணப்பொன்மாலைமுன் காட்டிபநீர்
நச்சுப்பொய்கைத்தலத் தைவரைமீட்டிடி னன்மையுண்டே. (௩௱௧)

தனதடம்பத்தி செலுத்தலரற்கெனுந் தர்மவுள்ளத்
தனதடம்பத்தி தருரகுநாதன் சயிலமன்னீர்
தனதடம்பத்திபந் தந்திரினியஞ் சனவைவச்சு
தனதடம்பத்தி யதிகாரமுந்தரத் தக்கவரோ. (௩௱௨)

வைப்போதகத்தை மரமாநிதிமணி மானுமெய்யி
சைப்போதகத்தை வரரகுநாதன் சயிலமன்னீர்
நைப்போதகத்தை நுசுப்பீரினிதுட னுனுங்கள்பொய்
கைப்போதகத்தையுங் கைப்போதகமெனக் காணட்டுமே. (௩௱௩)

பண்டுதந்தீர்வையில் லாமற்குடிகட்குப் பற்றலர்மெய்
விண்டுதந்தீர்படச் செய்ரகுநாத விசயன்வெற்பில்
வண்டுதந்தீர்வை கியகுழலீர்கொண்டை மாலைமணச்
செண்டுதந்தீர்சர முந்தரக்கோருமென் சிந்தனையே. (௩௱௪)

வருமலைவென்ற ரவிபோற்பகையை மடித்துக்கொடைத்
தருமலைவெய்தத் தருரகுநாதன் சயிலமன்னீர்

பொருமலையீசத் திமைபொழித்திருப் புரிவலியை
யிருபுலையுந்தவிர்த் தானீர்மருத்துவ ரெங்களுக்கே. (௩௱௫)

அல்லாரைக்குண்டல வில்லாரைமந்திரத் தாற்செம்பிரா
டெல்லாரையுநதொட வாழ்ரகுநாதன் வெற்பேந்திழையீர்
நல்லாரைப்போல்வரும் கல்லாரைவிட்டெந்த ஞாயஞ்சொல்லு
மில்லாரைக்காய்கின்ற வல்லாரைக்காட்டுத லெங்களுக்கே. (௩௱௬)

உடலையிருதலை யுற்றேன்பழிதொடர்ந் தோடிவர
வடலையும்வென்ற ரகுநாதன்றேவை யணிவரைவாய்
மடலைநிகர்த்த குழலீர்நறசர்க்கரை வட்டுத்தந்தீர்
கடலையும்விட்டுக லந்தாலல்லோருசி காண்பதுவே. (௩௱௭)

வளமேவுதேவை ரகுநாதபூபன் வரையிடத்தே
குளமேவுசெஞ்சொற் குயிலனையீர்நின்கொடுவிரக
முளமேவுகாம சுரதாகந்தீர்க்கிட வுன்னிடத்தா
மிளநீரைத்தந்தினிக் கண்டிறவாவிடி லென்பலனே. (௩௱௮)

நித்தங்கும்பிட்டுப் பராசர்பற்கெஞ்சி நிற்பப்பொன்னை
வைத்தங்கிருக்கும் ரகுநாதன்றேவை மணிவரைவாய்
நத்தங்கும்பிட்ட குழலீரதிசய நன்றுநன்றிங்
கத்தக்கும்பத்தை விட்டப்பாலிராசிநட் பானதுவே. (௩௱௯)

பையாட்டரவம் புனைராமலிங்கர் பதம்பணியு
மையாளெனுஞ்சொற் றுசரகுநாதன் மைந்நாகமன்னீர்
செய்யாததிசயஞ் செய்தீர்தனத்தைத் திறந்தளித்துக்
கையாற்கடலடைத் தீர்திருமாறிறங் காட்டியதே. (௩௱௰)

கோவைத்துறையொன்றி னுனூறுகொண்டமைக் கொண்டலெங்க
டேவைத்துரைதள வாய்ரகுநாதன் சிலம்பின்மத
னேவைக்கொடியை முரசைவின்னுணை யென்பால்வனசப்
பாவைக்கமுதனை யீர்மறைத்தீரொன் பகையென்னவே. (௩௱௰௧)

இரகுநாதசேதுபதிஒருதுறைக்கோவை

முற்றிற்று.



☞ இன்னுங்குறைவுபட்ட செய்யுட்களிப்பொழுது கிடைத்தற்கரிதாயிருத்தலின் பின்னரவற்றைச்சேகரித் திரண்டாமுறையச்சிற் பதிப்பித்துவெளிப்படுத்தப்படும்.